# கல்கி

KALKI 23.10.94 ரூ. 3.00



# போனஸ் டைம்!




# நிலா

நிகழ்கால நாகரிகத்தின்
தேர்வுக்கு

*நிலா* - வெள்ளி ஜரிகையில்
உருவாகும் நவ நாகரிகம்.

ஊடும் பாவுமாய்
நவீனமும் பாரம்பரியமும்.
காலத்தை வெல்லும் கருவூலமாக
ராசி வழங்கப்படுகிறது —
நிகழ்காலத்தின் நவ நாரீமணியான
தங்களுக்கு.

1. சன்னதி தெரு,
மயிலாப்பூர்,
சென்னை-600 004.

E-57, இரண்டாவது
பிரதான சாலை,
அண்ணா நகர் கிழக்கு,
சென்னை-600 102.

தீபாவளி சிறப்பு விற்பனை: சிவசக்தி கல்யாண மண்டபம்,
W-126, அண்ணா நகர் கிழக்கு பேருந்து நிலையம் எதிரில், சென்னை - 600 040.

SAREE DESIGN K. RAJARAMAN



# அப்பாக்களுக்குப் பிரசவ லீவு!

பேறுகாலங்களில் வேலைக்குப் போகும் பெண்களுக்கு வழங்கப்படும் 'மெடர்னிடி லீவு' போலவே, குழந்தைப் பராமரிப்புக்காக ஆண்களுக்கும் 'பெடர்னிடி லீவு' வழங்கப்பட வேண்டும் என்கிற மேல்நாட்டு நடைமுறை இப்போது இங்கேயும் நுழைய ஆரம்பித்திருக்கிறது. முதலில் நுழைந்திருக்கும் இடம் NIIT நிறுவனம்.

இந்த வசதி கடந்த ஆண்டிலிருந்து NIITயில் அமலுக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. குழந்தைக்கு ஓராண்டு நிறைவாகும் வரை ஆண்களும் இந்த வசதியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இந்த விடுமுறைக் காலம் ஆறு மாதம் - பாதிச் சம்பளத்தில். இதை மொத்தமாகவோ அல்லது ஒரு மாதம் விட்டு ஒரு மாதமாகவோ இல்லை ஒரு வாரம் விட்டு ஒரு வாரமாகவோ எடுத்துக் கொள்ளலாம். ஆயினும் இந்த நிறுவனத்தில் பணிபுரியும் எந்த ஆணுமே இதைப் பயன்படுத்திக் கொள்ள முன்வாவில்லை!

பொதுவாக, ஆண்களுக்கான இந்த விடுமுறை பற்றி என்ன நினைக்கிறார்கள்? "ஒரு குழந்தையைப் பெறுவதற்கு மட்டுமல்ல; அதை வளர்ப்பதிலும் தாய்க்கு ஈடான பொறுப்பு தந்தைக்கும் இருக்கிறது என்று ஆண்களும் உணர்ந்து கொண்டு வரும் இந்தச் சூழ்நிலையில் இதுபோன்ற விடுமுறை எல்லா நிறுவனங்களிலுமே வழங்கப்படுவது அவசியம்!" என்கிறார், செய்தி வாசிப்பாளரான ஃபாத்திமா பாபு.

"நடைமுறையில் பார்த்தாலும் இப்போது கூட்டுக் குடும்பங்கள் அரிதாகிக் கொண்டு

வேண்டவே வேண்டாம்!

• மீனாட்சி



வேண்டும்!

• விஜி.



இங்கே வேண்டாம்!

• விசுவநாதன்



வேண்டும்!

• ஃபாத்திமா பாபு



வேண்டாம்!

• மோகன்



• சுவர்க்கத்திற்குப் பாதை இருக்கிறது; ஆனால் அதில் யாரும் போவதில்லை. நரகத்திற்கு நுழை வாயில் இல்லை; ஆனால் மனிதர்கள் சுவர் ஏறிக் குதிக்கிறார்கள்!

- சீனப் பழமொழி

தகவல் : பி.என். ஜெய்சங்கர்

தான் வருகிறது. கணவன் - மனைவி என்று இருவர் மட்டுமே கொண்ட தனிக் குடும்பங் களுக்கு இது மிகவும் வசதியாக இருக்கும். என்னதான் மாமியார், மாமனார் அல்லது பெற்றோரை அழைத்து வைத்துக் கொண்டா லும் வயதான காலத்தில் அவர்களுக்கு இது கூடுதல் பொறுப்புத்தானே! எனக்கு மகன் பிறந்த போது, எனக்குக் கிடைத்த மூன்று மாத பேறுகால விடுப்பை எடுத்துக் கொண்டு, அதன் பிறகும் கிடைக்கும் 21 நாட் களையும் எடுத்த பிறகு, மனசில்லாத மன சுடன்தான் மீண்டும் வேலைக்குத் திரும்பி னேன். இரவு நேரங்களில் குழந்தை அழுதால் சமாளிப்பது, மற்ற வேலைகள் எல்லாவற்றி லும் பாபு எனக்குத் தோள் கொடுப்பார். இந்த நிலையில் இப்படியொரு வசதி இருந் திருந்தால் கண்டிப்பாக அவர் அதைப் பயன் படுத்திக் கொண்டு எனக்கு எத்தனை ஆதர வாக இருந்திருப்பார்!" என்கிறார் ஃபாத்திமா பாபு.

ஆனால் விஜிராஜா மாறுபடுகிறார். "என்னதான் அப்பா கவனிப்பு என்றாலும் அதெல்லாம் அம்மா எதிரில் இருக்கும்வரை தான் செல்லுபடியாகும்!" என்கிறார். "எத் தனை ஆண்களால் தனியாக ஒரு கைக் குழந் தையை முழு நேரமும் சமாளிக்க முடியும்! இதற்காக அவர்கள் லீவு போட்டு பாதி சம்பளத்தையும் இழக்கணுமா...?!" என்கிறார்.

இவருடைய கருத்தில் முழுக்க முழுக்க உடன்படுகிறார், மீனாட்சி விசுவநாதன். இவர் குழந்தைக்காகத் தமக்கு மிகவும் விருப்பமான ஆசிரியப் பணியை ராஜி நாமா செய்தவர்.

"அப்போது எனது கணவருக்கும் இது மாதிரியான விடுமுறை வசதி இருந்திருந்தால் கூட நான் என் வேலையை ராஜிநாமா செய் வதிலிருந்து பின்வாங்கியிருக்க மாட்டேன்..." என்கிறார். "இப்போது என் மகனுக்கு மூன்று வயது. அதனால் மீண்டும் வேலைக்குப் போக ஆரம்பித்திருக்கிறேன்!" என்கிறார் மீனாட்சி.

"நீங்கள் வேலையை விட்டு விட்டு மீண் டும் போவதால் உங்களுடைய சீனியாரிட்டி, சம்பள விகிதம் இவற்றிலெல்லாம் ரொம்ப வும் பாதிப்பு ஏற்பட்டிருக்குமே?" என்ற போது, "அதெல்லாம் இவனுக்கு முன் எம் மாத்திரம்?" என்கிறார், தமது மடியிலிருந்த மகனை முத்தமிட்டபடியே!

பெண்கள் இவ்வாறு தாய்மையை முதல் பணியாக நினைக்கிறவரை 'பெடர்னிடி' லீவெல்லாம் இங்கு நடைமுறைக்கே வராது!

ஆனால், மேற்கத்திய நாடுகளில் நிலவரம் இப்படியில்லை. "நான் லண்டனில் (80-ல்) இருந்த போது, இந்த விஷயம் பார்லி மெண்ட் வரை அலசப்பட்டு, ஆண்களுக்கும் விடுமுறை என்பது அரசாங்க விதியாகவே மாற்றப்பட்டது. என் இரண்டாவது மகன் பிறந்த போது, கிடைத்த நான்கு வார விடு முறை மிகவும் உதவியாக இருந்தது!" என் கிறார் ஆர். எஸ். விசுவநாதன்.

"அங்கெல்லாம் மனைவி கருவுற்ற நாள் முதலே கணவனுக்கும் பொறுப்பு தொடங்கி விடுகிறது. செக்-அப்புக்காக மனைவியை டாக்டரிடம் அழைத்துச் செல்லும் போதும், பிரசவ நேரத்தின் போதும் கணவனும் உடனிருக்க வேண்டும். கணவன்மார்களுக் குப் பிறந்த குழந்தையை எப்படித் தூக்குவது எப்படி குளிப்பாட்டுவது என்றெல்லாம் சொல்லியும் கொடுக்கிறார்கள்!" என்ற அவரிடம் "அதே நிலை இங்கும் இருக்கிற சூழ்நிலையில் நீங்கள் லண்டனில் செய்தது போலவே இங்கும் செய்வீர்களா?" என் றோம்.

"கண்டிப்பாக மாட்டேன்!" என்கிறார், சிறிதும் தயக்கமின்றி. "இங்குள்ள சூழ் நிலையே வேறு. மாமியார், கொழுந்தியாள் என்று நமது உறவுப் பெண்களின் தடுப்புச் சுவர் ஆண்களை அந்த உலகத்திலிருந்தே அப்புறப்படுத்தி விடுகிறதே!" என்கிறார், விசுவநாதன்.

"ஆமாம்; நம்மைப் பொறுத்தவரை குழந்தை வளர்ப்பு என்பது அன்னையின் ஏகபோக உரிமையாகத்தான் வைத்திருக்கி றோம்!" என்கிறார் 'ரெடிமணி' உரிமை யாளர் மோகன்.

"பந்த், ஸ்டிரைக் என்பதெல்லாம் போக, உலகிலேயே மிகக் குறைவான வேலை நாட் களைக் கொண்டது நமது தேசம். இந்த நிலை யில் ஆண்களுக்கும் பெடர்னிடி லீவா? லீவை எடுத்துக் கொண்டு, சும்மா தொட் டிலை ஓர் இரண்டு ஆட்டு ஆட்டி விட்டு, வெளியே போய் வீண் பொழுது போக்கத் தான் பெரும்பாலான ஆண்களுக்கு வசதி யாக இருக்கும்!" என்கிறார் மோகன்.

இருப்பினும் பெடர்னிடி லீவ் என்கிற வசதி, பணியிடத்தில் பெண்களுக்குத் தரப் படுகின்ற மரியாதையின் அறிகுறி. அது மட் டும் அல்ல, குழந்தை வளர்ப்பில் தந்தைக்கும் பொறுப்பு உண்டு என்று உணர்த்துவதன் மூலம் ஆரோக்கியமான மாற்றத்தின் ஆரம்ப மாக அதைக் கொள்ளலாம்.

— நிர்மலா சக்ரவர்த்தி



*நீங்கள் எண்ணிப் பார்க்க முடியாத கலைப் பொலிவுடன் தயாராகிறது!*

# கல்கி தீபாவளி மலர்-94

● அமரர் கல்கியின் நெடுங்கதை ● வைக்கம் முகமது பஷீர் குறுநாவல் ● மனுஷ்யபுத்ரன், பொன்மணி வைரமுத்து, மதிவண்ணன் இன்னும் பலரின் கவிதைகள் ● அமைதிப் பள்ளத்தாக்கு, பத்ராசலம், முத்யாலமடுவு - பயணக் கட்டுரைகள் ● பரவசமூட்டும் பக்திக் கட்டுரைகள் ● வசீகரிக்கும் வண்ணப்படங்கள் ● வெடிச் சிரிப்புப் பக்கங்கள் ● எண்ணற்ற சிறுகதைகள்... இன்னும்... இன்னும்... இன்னும்...

விலை ரூ. 40/-. பதிவுத் தபால் செலவு ரூ. 8/-. ஏமாற்றத்தைத் தவிர்க்க இன்றே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள். அல்லது நிர்வாகி, கல்கி, சென்னை - 97 என்ற முகவரிக்குத் தொகை அனுப்புங்கள்.

# உண்ணாவிரத மேடையில் ஒரு சார்க் மகாநாடு!

**வி**நியோகஸ்தர்களுக்கு எதிரான திரைப்படத் தயாரிப்பாளர்களின் அடையாள உண்ணாவிரதம் பற்றிய விவரமும் அது அரை நாளில் முடிந்து விட்ட செய்தியும் பேப்பரில் பார்த்திருக்கலாம். பின்வரும் தகவல்கள் அநேகமாக நீங்கள் பேப்பரில் பார்க்காதவையாக இருக்கும்.



●● எப்போதும்போல் ஒயிட் & ஒயிட்டில் இல்லாமல் ஒரு மாறுதலுக்கு கலர் ஷர்ட்டில் வந்திருந்தார் கே.பி. மிகச் சரியான நேரத்தில் மேடைக்கு வந்தவரும் அவரே. மற்றபடி ஒவ்வொருவராக 9.30 வரை கூட வந்தபடி இருந்தனர்.

●● விழா நாயகன் - ஸாரி - போராட்ட நாயகன் குஞ்சுமோன், மேடைப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்காமல் சைலண்ட்டாய் ஓர் ஓரத்தில் தம்மை ஒடுக்கிக் கொண்டு அமர்ந்திருந்தார். 'காதலன்' பற்றி யாராவது குறிப்பிட்டபோதெல்லாம் சின்னதாக ஒரு ஸ்மைல்.

●● சுகன்யா, ரேகா, பானுப்ரியா, ரஞ்சிதா, அஸ்வினி, ராதிகா என்று பாரதிராஜாவின் மாணவிகள் மொத்தமாக உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருந்தது பார்க்க வித்தியாசமாக இருந்தது. முந்தின நாள் வீட்டில் நடந்த 'கடத்தல் களேபரங்களை' மறந்து ரேகா (கண்ணாடி போட்டிருக்காங்க சார்!) வாய் விட்டுச் சிரித்ததைப் பலதரம் பார்க்க முடிந்தது.

●● வினிதாவை ஏனோ நடிகைகள் மொத்தமாக ஒதுக்கி விட்டார்கள். பேச ஆளின்றி போட்டோ கிராஃபர் இருந்தாலும் இல்லாவிட்டாலும் புன்னகைத்துக் கொண்டு அம்மணி பட்ட சிரமம் பார்க்க வெகு பரிதாபம்.

●● உண்ணா விரத மேடையின் பின்புறம் சத்யராஜ் கூட்டிய 'ஜமா'வில் விஜயகாந்த், சரத்குமார், பிரபு, கே. எஸ். ரவிகுமார், பிரபுதேவா, ரகுமான் (ஏ. ஆர். இல்லை.) தியாகு, அர்ஜுன் என்று ஒரு பெரும் கும்பல் சேர்ந்து கொள்ள, ஒரே சிரிப்பும் கூத்துமாக

மைக் இல்லாமலே மேடை அரண்டது.

●● கொஞ்ச நேரம் பார்த்திபன் நடிகையர் கும்பலைச் சிரிக்க வைக்க முயற்சி பண்ணிக் கொண்டிருக்க, "எப்ப இவரு சுகன்யா பேச்சு பழம்



விட்டாரு?" என்று ஒரு போட்டோகிராஃபர் காதைக் கடித்தார். அதானே! கிட்டத்தட்ட அரைமணி நேரம் (26 நிமிஷம்; 40 செகண்ட் என்று அதே ஃபோட்டோகிராஃபர் புள்ளி விவரம் தந்தார்!) சுகன்யாவோடு ஒரு சார்க் மாநாடே நடத்தி விட்டார் பார்த்திபன்.

●● உண்ணா விரதர்களுக்கு பாட்டில் பாட்டிலாக பிஸ்லேரி தரப்பட்டது. போதாக் குறைக்கு, அவ்வப்போது லைட்டு வாங்கி, பின்பக்கம் 'தம்' வேறு. சேம்பரர் ஒட்டிய கான்டீனில் செமை கும்பல். நிச்சயம் 'விரதர்'கள் இல்லையென நம்புவோமாக.

●● ரொம்ப நாளாய் (வருஷமாய்!) காணாமல் போயிருந்த 'மோகன்', மேடையில் காணக் கிடைத்தார்! "ரீஸன்ட்டா பூஜை போட்ட மகேசன் என்ன ஆச்சு சார்?" என்று கேட்கத்தான் ஆசை. ஆனால் அவர் முகத்தைப் பார்த்த போது ஏற்கெனவே அதை சக நடிகர்கள் கேட்டு வெறுப்பேற்றி யிருப்பார்களோ என்று தோன்றிற்று. ஸோ, ஐ கெப்ட் கொய்ட்.

●● உங்களால் எத்தனை நேரம் எதற்காகவும் வாயைத் திறக்காமல் இருக்க முடியும்? ஒரு மணி? இரண்டு மணி? மூன்று மணி?

சரியாக எட்டு இருபத்தைந்துக்கு மேடைக்கு வந்த ரஜினி, ஒரு மணிக்கு எழுந்திருக்கும் வரை வாயைத் திறக்க வேண்டுமே? யார் யாரோ வந்து அவர் காதில் என்னென்னமோ பேச, பதிலாய் வெறும் புன்னகை. இடத்தை விட்டு அங்கே இங்கே அசையாமல், பேசாமல், சிரிக்காமல், தண்ணீர் குடிக்காமல், தம் அடிக்கப் போகாமல்... ஒரு வார்த்தை சொல்லலாம். great!

●● பிரச்னைக்குள்ளான 'காதலன்' ஷங்கர், கண்ணில் படவேயில்லை. 'தடைபட்டிருக்கும் அனைத்து சென்டர்களிலும் உடனே காதலன் திரையிடப்பட வேண்டும்' என்று விவியோகஸ்தர்களுக்கான ஜி.ஓவை கமல் படிக்க, எஸ். ஏ. சந்திரசேகர் உற்சாகமாகக் கீழிருந்து கைதட்டினார். (விட்டால் விஸில் அடித்திருப்பார் போலிருக்கிறது!) என்ன இருந்தாலும் சிஷ்யப் பிள்ளை இல்லையா?

— நியூஸ்மேன்

படங்கள் : காமிரா திருஞானம்

## கின்னஸில் ஒரு முதல்வர்!



கின்னஸ் புத்தகத்தில் சாதனையாளராக இடம் பெறப்போகும் முதல்வர் ஆந்திர முதல்வரான விஜயபாஸ்கர ரெட்டிதான். இருபத்திரண்டு மாத காலமாகப் பதவி வகித்துக் கொண்டிருக்கும் ரெட்டி இதுவரை நூறு முறை டெல்லி சென்று வந்திருக்கிறார். இந்தச் சாதனைக்காக இவரைச் சிபாரிசு செய்யப் போகிறது தெலுங்கு தேசக் கட்சி!

நன்றி : இந்தியன் எக்ஸ்பிரஸ்

தகவல் : என். பங்கஜம்



# பானுப்ரியாவின் 'கப்சிப்!'

இருக்கு. இல்லைன்னா, சாப்பிட கூப்பிட்டு இருப்பேன்" என்றார். போலியாக உபசாரம் செய்யாது, வெளிப்படையாகப் பேசிய அவரது சுபாவம் என்னைக் கவர்ந்தது" என்றார் நெப்போலியன்

மறைக்காமல் பேசியவர்... மிஸ்டர் மம்முட்டி!

●● சினிமா தயாரிப்பாளர்களுக்குள் ஆர். தனபாலன் வித்தியாசமானவர். யாகவா முனிவர் கட்டளைப்படி படங்கள் எடுப்பதாகச் சொல்லும் இவர், அத்தகைய அனுமதிக்குக் காத்திராமலேயே பல நல்ல காரியங்களும் செய்து வருகிறார். சமீபத்தில் தகுந்த பராமரிப்பு இல்லாமல் தவித்துக் கொண்டிருந்த அம்பத்தூரில் உள்ள அண்ணா அனாதைகள் இல்லத்தை தம் சொந்தச் செலவில் ஏற்றுக் கொண்டு நடத்தி வருகிறார்.

●● ஒன்று.. பூஜ்யம்... பூஜ்யம்... லட்சுமிகரமான இந்த எண் பானுப்ரியாவை இரண்டு வருடமாகச் சதாய்த்து விட்டது. தொண்ணூற்று ஒன்பது படங்கள் முடித்த நிலையில், தமது நூறாவது படம் தமிழில் அமைந்து, அதுவும் பேர் சொல்லும் படமாக இருக்க வேண்டும் என்பது பானுவின் கனவு. அதற்காகச் சொந்தப் படம் கூட எடுக்கத் தயாராகத்தான் இருந்தார். ஆனால் அவரது நூறாவது படம் தெலுங்குப் படமாக அமைந்து விட்டது. படத்தின் பெயர் 'கப்சிப்'. பானுப்ரியாவின் முதல் படம் 'மெல்லப் பேசுங்கள்'. என்ன பொருத்தம்!

●● வசந்த் இயக்கத்தில் வளர்ந்து கொண்டிருக்கும் 'ஆசை' படத்திற்கு முதலில் 'தேவா' என்று பெயரைச் சூட்டினார்கள். பிறகு 'பூவெல்லாம் கேட்டுப் பார்' என்று வைத்தார்கள். 'ஆசை' என்ற சின்னத் தலைப்பு எல்லாரையும் கவர, அதையே வைத்து விட்டார்கள். பெயர் சூட்டலுக்கே இத்தனை டேக்கா!

●● நானும் அந்த நடிகரும் 'மாஸ்டர்' படத்தில் இணைந்து நடிக்கிறோம். ஒரு நாள் அவரது வீட்டிற்கு எனது நண்பர்களுடன் போயிருந்தேன். நாங்கள் போனது சாப்பாட்டு நேரம். உணவருந்தி விட்டு வந்த அவர், "அடடா! நீங்க நாலு பேர் வந்திருக்கீங்க. இப்ப வீட்டிலே ரெண்டு பேருக்குத் தேவையான சாப்பாடுதான்

●● பாரதிராஜாவின் இயக்கத்தில் 'திருவிழா' படத்தில் பிரபு நடிப்பதாகப் பூஜை கூட போட்டார்கள். என்ன காரணமோ, படம் வளரவில்லை. இப்போது பாரதிராஜாவுக்கு ஒரு ஆசை. நடிகர் திலகத்தை வைத்து ஒரு மகத்தான படம் செய்ய வேண்டும்; மகனையும் ஏமாற்றக் கூடாது என்று. அதனால் இரண்டு பேரையும் இணைத்துப் 'பசும்பொன்' என்ற கதையைத் தயார் செய்து விட்டார் பாரதிராஜா. பெரிய அய்யாவாக சிவாஜி நடிக்க, அவரது மாப்பிள்ளையாக பிரபு நடிக்கிறார். மகளாக ராதிகா!

பி.கு:

*வடிவேலு புதிதாக டாடாசியரா கார் வாங்கியிருப்பது, கவிதாஸ்ரீ வளசரவாக்கத்தில் புது வீடு கட்டிக் குடி போயிருப்பது, சமீபத்தில் விஜய்காந்த் பல் வலியால் அவதிப்பட்டது... போன்ற சின்னச் சின்ன சினிமா செய்திகளில் நீங்கள் ஆர்வம் காட்ட மாட்டீர்கள் என்பதால்தான் நாங்கள் அவற்றை இங்கே விரிவாகத் தரவில்லை!*

- ஹர்ஷராஜ்

# Kalki Shopping Page



7

# 5 ஆண்டுகளில்!

## என் முதலீடும், 20% ஆண்டு வருமானமும், பின் தேதியிட்ட செக்குடன் எனக்குக் கிடைக்க உத்திரவாதம் அளிக்கும் திட்டம்...

# 20 ஆண்டுகளில்!

## போனஸாக ரூ. 75,000/- மதிப்புள்ள தேக்குமரம் எங்களுக்குக் கிடைக்கிறது...

அனுபவ்
குட் எர்த்
யூனிட்ஸ்

தாத்தா சிரிக்கிறார், உல்லாசமாக. ஏன் சிரிக்கமாட்டார்? அந்தச் சந்தோஷச்சிரிப்புக்குக் காரணம் இருக்கிறது. அவர் செய்ய வேண்டியதெல்லாம் அனுபவ் "குட் எர்த் யூனிட்" திட்டத்தில் ரூபாய் 3,000 முதலீடு. உடனே 27.87 சதுர மீட்டர் நிலம் அவருக்கு 5 வருடக் குத்தகைக்குக் கொடுத்து விடுகின்றனர். அந்த நிலத்திலிருந்து வருமான வரி ஏதும் இல்லாமல் வருடத்துக்கு 20% வீதம் உத்தரவாதமான வருமானம் கிடைக்கிறது.

அதையும், தொடர்ந்து ஐந்து வருடங்களுக்கு ஆண்டுக்கு ரூ. 600 ரூபாய்க்கான பின் தேதியிட்ட செக்காக முன்கூட்டியே கொடுத்து விடுகின்றனர். அதுமட்டுமா! முதலீடு செய்த 3,000 ரூபாயும், ஐந்தாவது வருட கடைசியில், பின் தேதியிட்ட செக்காக முன்கூட்டியே கைக்குக் கிடைத்துவிடுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக 20 ஆண்டுக்குப் பிறகு போனஸாக ரூ. 75,000 மதிப்புள்ள 08.5 கன மீட்டர் தேக்கு மரம் கூடுதலாக கிடைப்பதற்கு அனுபவ் உத்திரவாதம் அளிப்பது இத்திட்டத்தின் இன்னுமோர் அருமை. உங்கள் வசதிக்கேற்ப மாதம் ரூ. 800 வீதம் தொடர்ந்து நான்கு மாதங்களுக்கு தவணை முறையில் முதலீடு செய்து யூனிட் வாங்குவதற்கு அனுபவ் அளிக்கும் அருமையான திட்டம் "குட் எர்த் யூனிட்".

இத்தனை பலன் தரும் திட்டத்தில் நீங்கள் சேராமல் இருப்பதா? உடனே அணுகுங்கள், அவர் பெற்ற இந்த பலன் நீங்களும் பெற்று வாழ்நாளில் வளம் பெற "குட் எர்த் யூனிட்".

● சென்னை: கார்ப்பொரேட் அலுவலகம்: நெ. 11, சோமசுந்தரம் தெரு, தி. நகர், Pin: 600 017 போன்: 8254155/8282629/8283316/8282833. பேக்ஸ்: 8284967. ■ நெ.23, கஸ்தூரி ரங்கன் சாலை, ஆழ்வார்பேட்டை, Pin: 600 018. போன்: 4990344, B.R. 34, காம்ப்ளெக்ஸ், இரண்டாவது மாடி, நெ.12, ராமகிருஷ்ணா சாலை, தாம்பரம். Pin: 600 059. நெ. 139/2, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, கோடம்பாக்கம், Pin: 600 024. போன்: 8256070/8260688. ● திருச்சி: ஜெனிஸி பிளாசா, கடை எண். 9, கிலெண்ட் பிளேஸ், நெ.5, பாரதியார் சாலை, Pin: 620 001. ● கோயம்புத்தூர்: 101 -105 D.B. சாலை, ஆர்.எஸ்.புரம், Pin: 641 002. ● பொள்ளாச்சி: நெ.50, ASP காம்ப்ளெக்ஸ், வெங்கடரமணன் தெரு, 642001. ● கரூர்: நெ.36, புதுத் தெரு, 639 001. ● சேலம்: சிவா பிளாசா, சாரதா கல்லூரி எதிரில், 639 009. ● திருப்பூர்: நெ.536, சாய் காம்ப்ளெக்ஸ், P.N. சாலை, 638 002. ● கும்பகோணம்: நெ.60-A, ASP காம்ப்ளெக்ஸ், இரண்டாவது மாடி, நாகேஸ்வரன் தெற்குதெரு ● ஈரோடு: 1090-C, கச்சேரி சாலை, ■ 1085, மேட்டூர் சாலை, மணிக்கூண்டு எதிரில், 638 001. ● திருநெல்வேலி: 25 - B இரண்டாவது மாடி, S.R.C. காம்ப்ளெக்ஸ், S.N. நெடுஞ்சாலை, திருநெல்வேலி ஜங்ஷன் போன்: 337960 ● பாண்டிச்சேரி: நெ. 234, அண்ணா சாலை, முதல் மாடி, வாட்டர் டாங்க் அருகில், 605 001. ● வேலூர்: நெ. 8/B, கமிஷனரி ரோடு, சேலஞ்சர் சென்டர், பூம்புகார் எதிரில் ● காரைக்குடி: நெ.10, வேலு ஒழுக்கத் தெரு, சுப்ரமணியபுரம், 623 002. ● கல்பாக்கம்: மெயின் பிரதான சாலை, சத்ராஸ் தெற்கு, 603 012. ● காஞ்சிபுரம்: ரவீந்திரன் பில்டிங், 8/A முதல் மாடி, வள்ளல் பச்சையப்பன் தெரு, 631 501. ● மதுரை: நெ.119, இரண்டாவது மாடி, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, 625 001. ● ஹைதராபாத்: 302, மூன்றாவது மாடி, மெகாஸ் டவர் சென்டர், 116, பார்க் லேன் 500 003. போன்: 841331. பேக்ஸ்: 815731. ● விஜயவாடா: ஸ்ரீ லக்ஷ்மி டாக்கீஸ் காம்ப்ளெக்ஸ், ஏலூரு சாலை, போன்: 74646. ● விசாகப்பட்டினம்: ராம்ஸ் ஆர்கேட், திரன் கார்டன் பிரதான சாலை. ● வாரங்கல்: வீட்டு எண். 2-442/19, சென்ட்ரல் எக்சைஸ் காலனி, தீர்கா பரிஷத் தங்கும் விடுதி எதிரில், ஹனமகொண்டா ● கொச்சி: XXXIX/5748-A இரண்டாவது மாடி, சிஸால் சேம்பர்ஸ், குரியச்சிரி சாலை, M.G. சாலை சமீபம், ரவிபுரம், 682015. போன்: 37218. பேக்ஸ்: 370031. ● திருவனந்தபுரம்: T.C.26/2169, இரண்டாவது மாடி, செக்ரடேரியட் வார்டு, கிரெசென்ட் பிளேஸ், சிலை சாலை, 695 001. ● காலிகட்: 4/323, இரண்டாவது மாடி, சுதர்சன் பில்டிங்ஸ், டெலிபோன் பவன் அருகில், காந்தி சாலை, 673 032. ● பெங்களூர்: 105/3, ரெஜு கிரான் சேம்பர்ஸ், 11, இன்ஃபன்ட்ரி ரோடு கிராஸ், போன்: 5591483. பேக்ஸ்: 5591406.

அதிக யூனிட்டுகள் வாங்குங்கள் - அதிக பலனைப் பெறுங்கள் !

# அனுபவ் அளிக்கும் "குட் எர்த் யூனிட்ஸ்"

| திட்டம் | யூனிட்டுகள் எண்ணிக்கை | முதலீட்டுத் தொகை | 5 ஆண்டுகளுக்கு வரும் வருமானம் | 5 ஆண்டு முடிவில் திருப்பி தரப்படும் தொகை | போனஸ் | | 20 ஆண்டு முடிவில் எதிர்பார்க்கப்படும் ஆதாயம் ** |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | அளிக்கப்படும் தேக்கு மரங்கள் | உத்தரவாதமாய் அளிக்கும் தேக்கு மரத்தின் அளவு (கன மீட்டர்) | |
| | | ரூ. | ரூ. | ரூ. | | | ரூ. |
| A | 1 | 3,000 | 600 | 3,000 | 1 | 0.85 (30 க.அடி) | 75,000 |
| B | 5 | 15,000 | 3,000 | 15,000 | 7 | 5.95 (210 க.அடி) | 5,25,000 |
| C | 10 | 30,000 | 6,600 | 33,000 | 14 | 11.89 (420 க.அடி) | 10,50,000 |
| D | 30 | 90,000 | 21,000 | 1,05,000 | 45 | 38.23 (1350 க.அடி) | 33,75,000 |

**ஒரு கன மீட்டர் தேக்கு மரத்துக்கு, 20 ஆண்டுகளுக்குப் பிறகு உத்தேசமாக எதிர்பார்க்கப்படும் விலை ரூ. 88,300/- என்ற அளவில் கணக்கிடப்பட்டுள்ளது. (சராசரி கன அடி ரூ. 2,500 வீதம்)

## அனுபவ் திட்டத்தின் சிறப்பு அம்சங்கள் !

- அனுபவ் குட் எர்த் யூனிட்ஸ் எளிதில் மாற்றக் கூடியது.
- நீங்கள் முதலீடு செய்யும் செக்கை அனுபவ் நிறுவனம் பெற்றவுடன் அதன் அங்கத்தினராவதற்கு தேவையான படிவங்கள் அனுப்பப்படும். அதை பூர்த்தி செய்து கையெழுத்திட்டு அனுப்பினால் 60 நாட்களுக்குள் நீங்கள் அங்கத்தினராக ஏற்றுக்கொள்ளப்படுவீர்கள். அத்துடன் 6 பின் தேதியிட்ட செக்குகளும் 0.85 கன மீட்டர் தேக்கு மரத்திற்கு உத்திரவாதம் தரும் உறுதிப் பத்திரமும் அனுப்பப்படும்.
- எல்லா விசா/மாஸ்டர் கார்டுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.

அனுபவ் "குட் எர்த் யூனிட்ஸ்" பற்றிய மேற்கொண்ட விபரங்களுக்கு அருகிலுள்ள அனுபவ் கிளை அலுவலகங்களை தொடர்பு கொண்டால் அனுபவ் பிரதிநிதிகள் (Representatives) தங்களை வந்து சந்திப்பார்கள்.

**அனுபவ்**
**பிளான்டேஷன்ஸ் லிமிடெட்**
11, சோமசுந்தரம் தெரு, தி.நகர்,
சென்னை - 600 017.
தொலைபேசி எண்: 8254155, 8282629, 8283316, 8282833.
ஃபேக்ஸ் : 044-8284967.
பம்பாய் • டில்லி • கல்கத்தா
• பெங்களூர் • கொச்சி • ஹைதராபாத்

கூப்பன்:-

ஆம், நான் அனுபவ் குட் எர்த் யூனிட்டில் முதலீடு செய்ய விரும்புகின்றேன். இத்துடன் அனுபவ் பிளான்டேஷன்ஸ் லிட்-A/C "குட் எர்த் யூனிட்ஸ்" என்ற பெயரில் எடுக்கப்பட்ட செக்/டிராப்ட் எண்.................... தேதி.................... தொகை ரூ.................... தேவையான....................யூனிட்டுகளுக்கு அனுப்பியுள்ளேன்.

பெயர் : ....................

முகவரி : ....................

....................

தொழில் : ....................

தொலைபேசி

## அனுபவ் "குட் எர்த் யூனிட்ஸ்" - ஒப்பற்ற புதுமைத் திட்டம்

● மைசூர்: 9/10, H.R. தெரு, C/o பவரியா பில்டிங் சர்வீஸஸ், 570002. போன்: 31981/26965. ● மங்களூர்: காப்பின் காம்ப்ளெக்ஸ், காப்பின் பில்டிங் சென்டர் பில்டிங், காப்பக், M.G.சாலை, 575 004. ● டில்லி: SF3, அம்பா ஆர்கேட், 1/BB, பூசா சாலை, இரண்டாவது மாடி, 110 005. போன்: 5788871/72/73 பேக்ஸ்: 5788874. ● சண்டிகர்: SCO 44,45- செக்டர் 9D, ஹைடெக் சேம்பர்ஸ், மத்யா மார்க், 160 017. ● ஜெய்ப்பூர்: நந்தியன் காம்ப்ளெக்ஸ், ஃபிளாட் நெ. 320, மூன்றாவது மாடி, ஸ்டேஷன் ரோடு, 302001. போன்: 361905. ● பம்பாய்: தீர்த்தங்கர் அபார்ட்மெண்ட்ஸ், முதல்மாடி, 294, S.K. போல் சாலை, தாதர், 400 028. போன்: 4362005/4309554. ■ ஸ்பெக்ட்ரம், மாலெக்ஷ்மி வாடியா பில்டிங்ஸ் முதல் மாடி, 127, M.G. சாலை, பம்பாய் பல்கலைக் கழகம் எதிரில், 400 023. போன்: 273853/275853. பேக்ஸ்: 2618502. ■ 13 'லக்ஷ்மி', 17வது சாலை, செம்பூர், 400 071. போன்: 5552212. கான்பூர்: 2/F, ஐந்தாவது மாடி, காமர்ஸ் சென்டர், சாம் ஹவுஸ் பில்டிங், 14/145, மகாத்மா காந்தி ரோடு Pin: 208 001.

தமிழ்நாட்டில் அங்கீகரிக்கப்பட்ட விற்பனை ஏஜெண்டுகள்: ஸ்ரீ ராமகிருஷ்ணா டிரேடிங் கார்ப்பொரேஷன். ●ஈரோடு: 142, மேட்டூர் சாலை, 638 011 போன்: 70534 ; 70948. பேக்ஸ்: 0424-77685 ● கோயம்புத்தூர்: 30, காளிங்கராயன் தெரு, ராம் நகர், சிதம்பரம் பார்க் எதிரில், 641009. போன்: 232480. ●சேலம்: திவ்யா டவர்ஸ், போர்ட் பிரதான சாலை, செவ்வாய்பேட்டை, போன்: 51244. ● சென்னை: 633/6 பூந்தமல்லி நெடுஞ்சாலை, அமைந்தகரை, 600 029. போன்: 6214875, பேக்ஸ்: 044-6214879. ● திருச்சி: B-11, ஜெனிசி ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், 5, பாரதியார் சாலை, போன்: 43342. ● மதுரை: 1, காந்தி நகர் குறுக்கு தெரு, (அண்ணா பஸ் நிலையம் பின்புறம்) காந்தி நகர், போன்: 41189. ● பாண்டிச்சேரி: பெருமாள் ராஜா தோட்டம், 10 வில்லியனூர் சாலை, ரெட்டியார் பாளையம், ● திருச்செங்கோடு: 99, தெற்கு ரத வீதி, போன்: 53270, 50472. ● நாமக்கல்: 16, திருச்செங்கோடு சாலை, ராஜா ஆயில் மில் பில்டிங், சாந்தி தியேட்டர் அருகில், போன்: 20489 ● கோபி: 13, சதி பிரதானசாலை, போன்: 2516.

இங்கேயா?
கொலையா...?
ஒண்ணுமே
நடக்கலியே?
வதந்திகளை
நம்பாதீர்கள்...

தமிழ்நாடு சட்டம் ஒழுங்கு

எவ்வளவு
நேரம்தான்
காலைத் தூக்கி
வச்சிட்டு
நிக்கிறது?
என்ன
ஓடியாள
இருக்கா
ன்னு
புரியலை
யே?

பிரதமர்

ஒன்...
ஒன்...
டூ...டூ

திவாரி

சட்டு
புட்டுன்னு
'த்ரீ' சொல்லித்
தொலையுங்க...

முலாயம்சிங்
யாதவ்

சதாம்
உசேன்




கல்கி





1994
அக்டோபர் 23
பவ
ஐப்பசி 6
மலர் : 53
இதழ் : 12


தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# இந்து முன்னணித் தலைவர் படுகொலை!

இந்து முன்னணி மாநிலத் தலைவர் ராஜகோபாலன் மதுரையில் படுகொலை செய்யப்பட்ட பிறகு, சற்றும் தாமதமின்றி முதல்வர் விடுத்துள்ள அறிக்கை, அவரது அரசியல் ஞானத்தையும் ஆற்றலையும் திக்கெட்டும் பறைசாற்றுகிறது.

'மாநில ஸி.ஐ.டி. இந்தப் படுகொலையை ஆராயும்' என்று உறுதி அளித்திருப்பது, அடேயப்பா, எவ்வளவு பெரிய விஷயம்! சுஜாதாவின் வசந்த், அல்லது தேவனின் துப்பறியும் சாம்பு வரக் காத்திராமல், "மாநில ஸி.ஐ.டி.யே கடமையாற்றும்" என்று கூறி விட்டது தமிழக மக்களுக்கு ரொம்ப ரொம்ப ஆறுதல்!

"கொலைகாரர்களின் பின்னணி எதுவானாலும் சரி, அவர்களைக் கைது செய்ய அரசு தயங்காது" என்றும் கூறி விட்டார் முதல்வர். இந்த மகத்தான சலுகையால் நாம் மூர்ச்சித்து விழாதது குறைதான்! வக்கீல் விஜயனின் எலும்புகளை முறித்தவர்கள், ஆர்.எஸ்.எஸ். தலைமையகத்தைத் தகர்த்தவர்கள், ஏழுமலை நாயக்கரைத் தீர்த்துக் கட்டியவர்கள் முதலிய பலரை இன்னும் பிடிக்காத போது, "ராஜகோபாலன் மரணத்துக்குக் காரணமானவர்களை வளைத்துப் பிடிப்போம்" என்று முதல்வர் உறுதி கூறியது மாபெரும் சலுகைதானே!

தமிழ்நாட்டில் வீடு புகுந்து கொள்ளையடிப்பதும் அதற்காகவே கொலைபுரிவதும் சர்வசகஜமாக இருக்கும் போது, ராஜகோபாலன் கொலைக்கு மட்டும் ஸி.பி.ஐ. விசாரணை வேண்டும் என்று வாழப்பாடி யார் கேட்பது என்ன நியாயம்? ராஜகோபாலன் மரணத்தில் எத்தனையோ விஷயங்கள் உள்ளடங்கி இருக்கலாம். அ.தி.மு.க. வினரிலேயே அவரைப் பிடிக்காதவர்கள் யாரேனும் இருக்கலாம். நிலத் தகராறில் பகை உணர்வு யாருக்கேனும் இருந்திருக்கலாம். அல்லது இந்து முன்னணியின் மதத் தீவிரவாதம் பிடிக்காத வேறு மதத் தீவிரவாதிகள் மேடை ஏறி, 'கொலைக் குற்றம் புரிய யார் யார் தயார்?' என்று கூடக் கேட்டிருக்கலாம். இதெல்லாம் இங்குள்ள ஸி.ஐ.டி.க்குத் தெரியாதா? மத்திய அரசின் ஸி.பி.ஐ. வந்து ஆகப் போவது என்ன? வதந்திகளைப் பரப்புவதுதான் மிச்சம். "வதந்திகளைக் கேட்டு ஏமாறாதீர்கள்; அமைதியாக இருங்கள்" என்று மக்களுக்கு ஜெ. வேண்டுகோள் விடுத்திருப்பது வாழப்பாடியாரையும் உள்ளடக்கித்தான்! வாழப்பாடி பாட்டுக்கு, "உண்மை அறிய ஒரு குழுவை மத்திய அரசு அனுப்ப வேண்டும்" என்று கூறி விட்டால், இங்கே நடக்கக் கூடாததெல்லாம் நடப்பதாக அல்லவா ஆகி விடும்!

அப்படி என்ன பிரமாதமாக நடந்து விடுகிறது? ஏதோ வீரப்பன் ஒரு கிராமத்தில் புகுந்து, ஏழெட்டு நரபலிகளைக் கொடுப்பானாயிருக்கும். குழந்தைகளைக் குடிசையில் வைத்துப் பூட்டி தீயிட்டுக் கொளுத்துவானாயிருக்கும். வீரப்பனைப் பிடிக்கப் போகும் போலீஸூம் கிராமப் பெண்களிடம் தங்கள் ஆண்மைத் திறனைக் காண்பிப்பார்களாயிருக்கும். அவ்வளவுதானே? நட்ட நடுநிசியில் நடிகை வீட்டுக் கதவைத் தட்டி அவரைக் கடத்திக் கொண்டு போக முயற்சி நடக்கும். இவ்வளவுதானே? இதையெல்லாம் பெரிசுபடுத்தி, மத்திய அரசு ஆய்வுக் குழு அனுப்புவதென்றால்... ஹே, மத்திய அரசுக்கு வேறு வேலையே இல்லையா என்ன?

கவலையே வேண்டாம்! ராஜகோபாலனைக் கொலை செய்தவர்களை ஜெ. அரசு கண்டிப்பாகப் பிடித்து விடும். அப்படி பிடித்த பிறகு, மாமண்டூரில் விடுதலைப் புலிகளைத் தப்ப விட்டது போல் ஒருகால் தப்ப விடுவார்களே தவிர, ஜாமீனில் விடுவிக்கப்பட்ட கர்லாவைக் கோட்டை விட்டது போல் நிச்சயம் கோட்டை விட மாட்டார்கள்!

ஒருவேளை ராஜகோபாலனைக் கொன்ற கூலிப் படையின் பின்னணியில் உள்ளோரைப் பிடிக்க முடியாமலே போய் விட்டால்தான் என்ன குடி முழுகிப் போய் விடும்? மாநில அரசே ஒரு விசாரணை கமிஷன் அமைத்தால் ஆயிற்று. அந்த விசாரணை கமிஷன் வேலை தொடங்கு முன்னரே அதற்கு மூடு விழாவும் நடத்தி விட்டால் தீர்ந்தது! தப்பித் தவறி அந்தக் கமிஷன் கடமையாற்றி, அறிக்கையும் சமர்ப்பித்து விட்டால்தான் என்ன? கோட்டையில் இன்னும் பிடிக்கப்படாத எலிகளுக்கு அது இரையாகப் போகிறது. பாவம் எலிகளுக்கும் வயிறு ரொம்ப வேண்டாமா?

புரட்சித் தலைவிக்குத் தெரியாததா? எல்லாவற்றையும் அவர் பொறுப்பில் விட்டு விட்டு, சிவனே என்று ராஜகோபாலன் குடும்பத்துக்கு அனுதாபம் தெரிவிப்பதுடன் திருப்தி அடையுங்கள்.

'போனஸ்' என்று சொன்னதுமே அனைவருக்கும் வண்ண வண்ணக் கனவுகள் விரிந்து வானவில்லாய் ஜொலிக்கும் என்று நினைத்துக் கொண்டுதான் கிளம்பினோம். பலத்த ஏமாற்றம்!

"போனஸா? அது கறுப்பா, சிவப்பா?" என்கிற கிண்டல்கள். "என்னங்க இது... காணாமல் போன பட்டியலில் சேர்ந்து போனதையெல்லாம் ஞாபகப்படுத்தி வயிற்றெரிச்சலைக் கிளப்பறீங்களே, இது நியாயமா?" என்கிற புலம்பல்கள்!

"ம்... பத்துப் பதினைந்து வருஷத்துக்கு முன்னால நாலாயிரம், ஐயாயிரம்னு கை நிறையப் போனஸ் வாங்கிக் குடும்பத்தோடு டிரெஸ் வாங்கி, பட்டாசு வாங்கிச் சந்தோஷமா செலவழித்திருக்கிறேன். இப்போது என்னதான் சம்பளம் அதிகரித்திருந்தாலும் பண்டிகை சமயத்தில் கிடைக்கிற அந்த போனஸ் தொகையை வாங்கிச் செலவழிக்கிற குஷியே தனிதான்!" என்று மலரும் நினைவுகளில் மூழ்கிப் போகிறவர்கள் ஏராளம்.

காரணம் என்ன? "1983-ல் அமலாக்கப்பட்ட போனஸ் சட்டத்தின்படி, சம்பளம் 2500 ரூபாயைத் தொட்டவர்களுக்குப் போனஸ் கிடையாது. அதற்குக் கீழ் சம்பளம் வாங்குபவர்களுக்கும் அதிகபட்சமாக 1600 ரூபாய்தான் போனஸ் கொடுப்பார்கள். இதன் காரணமாக, 32 பேர் பணிபுரியும் எங்கள் பாங்க் ஆப் இந்தியா கிளையில் இந்த ஆண்டு போனஸ் பெறுபவர்கள் மூன்றே பேர்தான். இப்போது வங்கி ஊழியர்களுக்கான சம்பள விகிதம் மாற்றியமைக்கப்பட்டிருப்பதால் இனி போனஸ் பெறும் வங்கி ஊழியர்களே இருக்க மாட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்!" என்கிறார் வி. எச். கிருஷ்ணன்.

தமிழக அரசின் மருத்துவத் துறையில் அலுவலக உதவியாளராகப் பணிபுரியும் கோபால், "எங்களுக்குப் பொங்கல் சமயத்துல கருணைத் தொகையா 800 அல்லது 850 ரூபாய் வழங்கப்படுகிறது. பொங்கல் செலவும் மனைவிக்குப் புடைவை, குழந்தைகளுக்குத் துணிமணிகளுமே ஆயிரத்தைத் தாண்டிடும். அப்புறம் எங்கங்க அந்தத் துட்டை நினைச்சுக் கனவு காண்றது?" என்கிறார்.


• ஆனந்த்

இவர்களின் நிலைதான் இப்

# போனஸ்

படி என்றால், சம்சார பந்தத்தில் இன்னும் சிக்கிக் கொள்ளாத பிரம்மச்சாரியான சி. என். ஆனந்தின் நிலை எப்படி? "அரசு ஊழியரான எனது போனஸ் 1013 ரூபாய். பெரும்பாலும் அதை அப்படியே கொண்டு வந்து என் அப்பாவிடம் கொடுத்து விடுவேன். அதனால் குடும்பத்தில் செய்யப்படும் மொத்த பண்டிகைச் செலவோடு அது கலந்து விடும். இந்த ஆண்டு எனது தங்கைக்கு ஏதாவது வாங்கித் தர வேண்டுமென்று விரும்பினேன். அவளது பேச்சில் அடிக்கடி 'ஃபிராக், கரிதார்' என்று அடிபட்டதால், 335 ரூபாய்க்குக் கரிதார் ஒன்று வாங்கிக் கொடுத்தேன்!" என்கிறார்.


• கிருஷ்ணன்


• கோபால்


• பத்மினி


• காஞ்சனா

தனியார் நிறுவனமொன்றில் வேலை பார்க்கும் செல்வி காஞ்சனாவுக்கு இரண்டாயிரம் ரூபாய் போனஸ். "அதை அப்படியே அப்பாவிடம் கொடுத்து விடுவேன். எனக்கு

டிரெஸ் வாங்க அவரே பணம் கொடுத்து விடுவார். அதனால் போனஸ் பணத்தைக் கொண்டு இதை வாங்க வேண்டும்; அதை வாங்க வேண்டும் என்கிற எண்ணமெல்லாம் எனக்குக் கிடையாது!" என்கிறார்.

போனஸ் உச்ச வரம்பு என்பது அரசுத் துறைகளுக்கு மட்டுந்தானா? தனியார் நிறுவனங்களுக்குக் கிடையாதா? "உற்பத்தியோடு இணைந்த நிறுவனங்களுக்கு விலக்குகள் உண்டு!" என்கிறார், தனியார் நிறுவனமொன்றில் பணிபுரியும் கே. ஸ்ரீனிவாசன்.

"அதாவது அதிகபட்சத் தொகையான 1600 ரூபாயுடன் கருணைத் தொகை மற்றும் productivity linked bonus என்று சொல்லப்படும் ஊக்கத் தொகை என்றெல்லாம் சேர்த்து ஒவ்வொரு தனியார் நிறுவனமும் அதனதன் வசதிக்கேற்ப ஐந்தாயிரம் ஆறாயிரம் ரூபாய் என்று கொடுப்




# டைம்!

பது சகஜமான ஒன்றுதான்!" என்கிறார் ஸ்ரீனிவாசன்.

நிறுவனம் லாபகரமாக நடந்து ஊழியர்களுடன் ஒப்பந்தம் இருந்தால் அதன்படிதான் போனஸ் தருவார்கள். நூற்பாலை, நெசவாலை, இதர பல தொழிலகங்கள், அயல்நாட்டு வங்கிகள் முதலியவற்றில் இப்படித்தான். இதை போனஸ் சட்டம் தடைசெய்யாது. இப்படிப்பட்ட அதிர்ஷ்டக்காரப் பிரிவைச் சேர்ந்தவர்களில் ஒருவர் எஸ். கிருஷ்ணகுமார். "எங்கள் கம்பெனியில் சாதாரணமாக ஜூனில்தான் போனஸ் கொடுப்பார்கள். ஜூலையில் எங்கள் திருமண நாள். அதனால் எனது போனஸில் எப்போதும் என் மனைவிக்குத்தான் பரிசு. இரண்டாயிரம் ரூபாய் கிடைத்த போது வாட்ச், புடவை, காதணிகள் என்று சின்னச் சின்னப் பொருளாக வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தேன். இந்த ஆண்டு ஐயாயிரம் ரூபாய் கிடைத்ததால் எனது பரிசும் தங்க வளையலாகப் புரமோஷன் பெற்று, அவளது கைகளை அலங்கரித்துக் கொண்டிருக்கிறது!" என்கிறார்.

இவரது மனைவி பத்மினி அரசு ஊழியர். 1600 ரூபாய் போனஸ். "எனது போனஸில் அவருக்கு பாண்ட், சர்ட் கட்டாயம் உண்டு!" என்கிறார். ஆனால் கிருஷ்ணகுமாரோ, "இவளது போனஸ் தீபாவளி சமயத்தில் கிடைப்பதால், இவள் பரிசாக வாங்கித் தரும் டிரெஸ் தீபாவளிக்கு வழக்கமாக வாங்குகிற லிஸ்டில் சேர்ந்து கொள்கிறது. அப்புறம் எனக்கென்று ஸ்பெஷலாக அவள் கொடுக்கும் பரிசு என்று எப்படி எடுத்துக் கொள்வது?" என்கிறார்.

ஐம்பது வயதைத் தாண்டிய நிலையில் ஆயிரக்கணக்கில் போனஸும் பெறுகிற வாய்ப்புள்ளவர்கள் எப்படிச் செலவழிக்கிறார்கள்? "எனக்கு மூன்று பெண்கள். அவர்களில் இருவர் தனியார் நிறுவனங்களில் வேலை பார்ப்பவர்கள். ஒருத்தி மட்டும் அரசு வேலையில். அவர்களுடைய போனஸை மொத்தமாகச் சேர்த்து, எனது போனஸிலும் சிறிது போட்டு முதலில் அனைவருக்கும் டிரெஸ் வாங்கி விடுவோம். பிறகு மீதமுள்ள தொகையில் ஒருத்திக்கு இந்த வருஷம் ஏதாவது நகை என்றால், அடுத்தவளுக்கு அடுத்த ஆண்டு என்று மாற்றி மாற்றி வாங்கித் தருவாள் என் மனைவி. இது தவிர, எனது பெண்கள் மூவருமே நகைக் கடைகளில் மாதாந்திர சீட்டுக் கட்டுவதால் அதன் மூலமும் அவர்கள் நகை ஏதும் வாங்கிக் கொள்ள முடிகிறது!" என்கிறார் நாராயணமூர்த்தி.

சாதாரணமாக ஏழாயிரம் ரூபாய் அளவுக்கு போனஸ் வாங்கும் செல்வராஜன், "நான் வருமான வரி கட்டுகிறவனாக இருப்பதால் ஏறத்தாழ அந்தத் தொகையை அதற்காகவே ஒதுக்கி விடுவேன். அதனால் எனது குடும்பத்தின் வருடாந்திர பட்ஜெட்டில் போனஸ் என்பது இடம்பெறாத ஒரு தொகைதான்! பண்டிகைக் காலங்களில் கோ-ஆப்டெக்ஸ் போன்ற அரசுத் துறை நிறுவனங்களில் வழங்கப்படும் கடன் சலுகைகளைப் பயன்படுத்தித்தான் துணிமணிகள் வாங்கிக் கொள்கிறோம்!" என்கிறார்.

இவையெல்லாம் ஒருபுறம் என்றால், மறுபுறம் சாதாரண நிலையிலுள்ள சில ஊழியர்கள், தங்களுக்குக் கிடைக்கும் அதிகபட்ச போனஸில் ஒரு பகுதியை வீட்டுச் செலவுகளுக்கென்று கொடுத்து விட்டு, கோ-ஆப்டெக்ஸ் போன்று தங்களுக்குக் கிடைக்கும் கடன் வசதியை மற்றவர்களுக்குக் கொடுத்து விட்டு, அவர்களிடமிருந்து ரொக்கமாகப் பெற்றுக் கொண்டு குஷியாகச் செலவழிக்கவும் செய்கிறார்கள்.

சில அதிர்ஷ்டக்கார அரசுத் துறை மற்றும் தனியார்துறை நிறுவனங்களும் உண்டு. அவற்றில் பணியாற்றுபவர்களின் கஸ்டமர்கள் பண்டிகைக் காலங்களில் சும்மா இருந்து விட மாட்டார்கள். இனிப்புப் பாக்கெட்டுகளோடு சிறு சிறு அன்பளிப்புகளையும் கொண்டு வந்து கொடுத்து விட்டுத்தான் பண்டிகைக்கு வாழ்த்துச் சொல்லுவார்கள்!

அன்றாடமும் பொது மக்களோடு தொடர்பு கொண்டிருக்கும் துறையிலிருக்கும் அதிகாரிகள் எப்படியோ, சாதாரண நிலையிலுள்ள ஊழியர்கள் "இன்னா சார்! தீபாவளிக்கு ஏதும் கொடு சார்!" என்று வெளிப்படையாகவே கேட்டு வசூல் செய்யத்தான் செய்கிறார்கள்.

ஆக, போனஸ் டைம் என்பது ஏராளமாகச் சம்பளம் வாங்குவதால் போனஸ் பெறாத சிலருக்கு வேண்டுமானால் ஆதங்கத்தைத் தரலாமே தவிர, பெரும்பாலானவர்களுக்கு, ஒரு கணநேரமாவது குஷியானதொரு சூழ்நிலையை உருவாக்கத்தான் செய்கிறது. கிடைக்கிற தொகையைச் சந்தோஷமாகச் செலவழிக்கத்தான் செய்கிறார்கள். அந்த சந்தோஷத்தில் 'முதல் செலவு சேமிப்பாகத்தான் இருக்க வேண்டும்' என்பதைப் பலரும் மறந்து போய் விடுகிறார்கள் என்பதுதான் உண்மை.

**— நமது நிருபர்கள்**

அட்டை வண்ணப்படம் : **யோகா**

நடிப்பு : **வெங்கட்**

வடிமைப்பு : **மதிக்குமார்**



பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி விதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



## மகளிர் ஆண்டு திட்டம்

**1994** சர்வதேச மகளிர் ஆண்டை முன்னிட்டு பெண்கள் பெயரில் செலுத்தப்படும் பிக்சட் டிபாசிட்டுகளுக்கு 1% அதிக வட்டி வழங்கப்படும்.
குறைந்த அளவு டிபாசிட் ரூ. 5000/- காலம்: 1 ஆண்டு



## பிறந்த நாள் பரிசு திட்டம்

ஆண்டுக்கு ரூ. 920/- வீதம் 4 ஆண்டுகள் செலுத்தி 5ஆம் ஆண்டு முதல் ரூ. 1000/- ஆண்டுதோறும் தொடர்ந்து பெறுவீர்!!



## கல்பதரு மணிபேக் திட்டம்

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !



## முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

| தொகை | காலம் | வட்டிவிதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

**சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்**




**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும் சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்

# ஏப்பம் விடுவதில் உலக சாதனை!

●● பங்குப் பத்திர ஊழல், 5000 கோடி ரூபாய் ஏப்பம் விடப்பட்டு விட்டது. ஆனால் நடவடிக்கை எடுக்கப்படவில்லை. இந்தத் துணிச்சல் காரணமாகவோ என்னவோ, ஏப்பம் விடுவதில் ஓர் இளைஞர் சாதனை புரிந்திருக்கிறார்,' டெல்லியைச் சேர்ந்த பரத்பூஷன் சர்மா. லிம்காபுத்தகத்தில் இடம்பெற்ற சாதனையை அடுத்து, ஏப்பத்தில் உலக சாதனையே புரியப் போகிறாராம்! அட கடவுளே!

●● ஆர்.வி.யின் புத்தகம் பரபரப்பை ஏற்படுத்தியது ஒருப்றம் என்றால், இந்த வருட இறுதி வாக்கில் வெடிகுண்டு ஒன்று வெடிக்கவிருக்கிறது. ஆம்! முன்னாள் ஜனாதிபதி ஜெயில்சிங், இப்போது எழுதிக் கொண்டிருக்கும் சுயசரிதை இவ்வாண்டு இறுதியில் வெளிவரப் போகிறது. அதனை வெளியிடும் உரிமை பெற பிரபல நிறுவனங்களான பெங்குவின் மற்றும் ரூபா இரண்டுக்குமிடையே கடுமையான போட்டி!

●● மார்பகப் புற்றுநோய்க்கும் கருப்பைப் புற்றுநோய்க்கும் இனி இந்தியாவிலேயே மருந்து கிடைக்கும். கண்டுபிடித்திருப்பது 'தாபர்' நிறுவனம். மருந்தின் பெயர் : இன்டாக்சில். விஞ்ஞானப் பெயர் : பேக்லிடாக்சில். அமெரிக்காவிலுள்ள மயர்ஸ் நிறுவனம் சென்ற ஆண்டு முதல் இதைத் தயாரித்து விற்க ஆரம்பித்தது. அங்கிருந்து இறக்குமதி செய்ய லட்சக்கணக்கில் செலவானது. "இனி இங்கேயே கிடைப்பதால் இறக்குமதிச் செலவில் மூன்றில் ஒரு பங்குதான் செலவாகும்!" என்கிறார் தாபர் நிறுவனத்தின் சென்னை அதிகாரி ஸ்ரீராம். அப்படியும் ஒரு பாட்டில் விலை 3,000 ரூபாய். ஒரு நோயாளி குணமடைய சுமார் ஒரு லட்ச ரூபாய்க்கான மருந்து தேவைப்படலாமாம்!

●● "பம்பாயின் புடுபிஸியான பகுதி. அங்கிருந்த பழங்காலக் கட்டடம் ஒன்றைச் சித்திரமாய்த் தீட்டிக் கொண்டிருந்தேன். ஓர் இளைஞர் அருகில் வந்து பார்த்து விட்டு, 'என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டார். 'இந்தக் கட்டடத்தைச் சித்திரமாய் வரைந்து கொண்டிருக்கிறேன்,' என்றேன். 'இந்தப் படம் வரைந்து முடிக்க எத்தனை நேரம் ஆகும்?' அடுத்த கேள்வி. பொறுமையுடன் நானும் பதில் சொன்னேன். 'ஒருசில விநாடிகளில் போட்டோவாய் எடுத்துக் கொள்ளலாமே! எதற்காக இப்படி நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்க வேண்டும்?' என்றாரே பார்க்கலாம்! எனக்கு அவர் மீது கோபப்படுவதா, பரிதாபப்படுவதா என்றே புரியவில்லை!" என்று சொல்லும் அந்த ஓவியர் தமது வீட்டில் ஒரு நாய், ஒரு கிளி ஆகியவற்றோடு இரண்டு ஆமைகளையும் வளர்த்து வருகிறார். இவர் யார் தெரியுமா?

●● ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரியில் சொற்பொழிவாற்றினார் அந்தப் புள்ளி. "நான் என் பதவியை விட்டுப் போக வேண்டுமானால் மூன்று வழிகள்தான் உண்டு. ஒன்று நானாக ராஜினாமா செய்ய வேண்டும். ஆனால் ராஜினாமா எண்ணம் எனக்குச் சிறிதளவும் இல்லை; இரண்டு, பாராளுமன்றம் மூலமாய் என்னை வீட்டுக்கு அனுப்பலாம். அதையும் ராவ் முயன்று பார்த்துத் தோல்வியடைந்து விட்டார். மூன்றாவது, கடவுளாகப் பார்த்து ஏதாவது செய்ய வேண்டும்; அதைத்தான் இன்றைய அரசியல்வாதிகள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்." இப்படிப் பேசியவர் யார்?

●● மறைந்த நகைச்சுவை நடிகர் 'டணால்' தங்கவேலு நடித்த கடைசி படம் பெரியமருது. அதில் அவர் தம் சம்பந்தப்பட்ட காட்சிகளை நடித்துக் கொடுத்து விட்டாலும், டப்பிங் பேசவில்லை. இப்போது, தங்கவேலுவுக்காகக் குரல் கொடுக்கப் போகிறவர் யார்? அந்தத் தகவலை இன்றே தெரிந்து கொள்ள முடியுமா?

*(இந்த மூன்று விடைகளுக்குமான விளக்கத்திற்கு 58-ம் பக்கம் பாருங்கள். - ஆர்.)*

# கடிதங்களைப் பெறவே மறுக்கும் முதல்வர் அலுவலகம்!

ஒரு பக்கம்.

கோடிக்கணக்கான ரூபாய்களில் மக்களுக்கான நலத் திட்டங்கள். இன்னொரு பக்கம் அதே மக்களை கொடூரமான முறையில் நசுக்குகிற நடவடிக்கைகள். உதாரணம் : இராம அதிகாரிகள் விஷயம்.

எம்.ஜி.ஆர். ஆட்சிக் காலத்தில் (80-ல்) இரவோடிரவாக 24,000 கிராம அதிகாரிகள் பதவி நீக்கம் செய்யப்பட்டார்கள். 82-ல் அவர்களில் 7,000 பேருக்கு மீண்டும் வேலை தரப்பட்டது. 91-ல் மீண்டும் 7,000 பேருக்கு வேலை தரப்பட்டது. மீதமுள்ள 10,000 பேரில் சுமார் 2,000 பேர் இறந்து போய் விட்டார்கள். மற்றவர்களும் 70 வயதுக்கு மேற்பட்டவர்கள்தான்.

இவர்களது வழக்கை விசாரித்த தமிழ் நாடு நிர்வாக டிரிபூனல், கடந்த 12.11.93ல் ஒரு தீர்ப்பு வழங்கியது. அதாவது, வேலை நீக்கம் செய்யப்பட்ட கிராம அதிகாரி களுக்கு, மாதம் 175 ரூபாய் பென்ஷனும் இறந்து போனவர்களின் மனைவிமார் களுக்கு மாதம் 100 ரூபாய் குடும்ப பென் ஷனும் வழங்க வேண்டுமென்றும் இவற்றை 86-ம் ஆண்டிலிருந்தே கணக்கிட்டு வழங்க வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறியது.



• டி. எஸ். ராஜகோபாலன்

ஆனால், கருணையே மிகுந்த ஜெ. அரசு, அந்தத் தீர்ப்பை அப்படியே தூக்கிக் கிடப்பில் போட்டு விட் டது. இதைக் கண்டு பதறிப் போன அந்த முதிய - வேலையிழந்த - கிராம அதிகாரிகள், தங்களின் அவல நிலை யை எப்படியாவது அர சாங்கத்தின் கவனத்துக் குக் கொண்டு வர வேண்டுமென்று பல எம்.எல்.ஏக்களிடமும் போய் முறையிட்டிருக் கிறார்கள். ஜெயலலிதா வைப் புகழ்வதற்குப் புதிய புதிய வார்த்தைகளைத் தேடிக் கொண் டிருப்பதாலோ என்னவோ, அவர்கள் இந்தக் கிழவர்களைக் கண்டுகொள்ளவே யில்லை.

சரி, இவர்கள்தான் இப்படியென்றால், அந்த ஆதிபராசக்தியின் வடிவமாகவே எழுந்தருளியிருக்கும் ஜெயலலிதாவும் அப்படியா என்ன! இருக்காது என்ற எதிர் பார்ப்போடு அவரைச் சந்திக்கப் பல முறை முயற்சி செய்திருக்கிறார்கள். ஆனால் இவர்களுக்கு அவர் தரிசனம் கிட்டவே யில்லை!

"எங்களது அவல நிலையை எடுத்துச் சொல்லியும் நிர்வாக டிரிபூனல் வழங்கிய தீர்ப்பை அமல்படுத்த உத்தரவிடுமாறும் அனைவரும் தனித்தனியே அஞ்சலட்டை யில் கடிதம் எழுதி முதல்வருக்கு அனுப்பி வைத்தோம். அதிலும் எங்களுக்குப் பேரிடி. நாங்கள் அனுப்பிய அத்தனை கார்டுகளும் முதல்வர் அலுவலகத்தில் வாங்கிக் கொள்ள மறுக்கப்பட்டு மீண்டும் எங்களுக்கே திரும்பி வந்து விட்டன!" என்று அழாத குறையாகச் சொல்கிறார், வேலையிழந்த கிராம அதி காரிகள் சங்கத்தின் மாநிலச் செயலாளரான டி.எஸ். ராஜகோபாலன்.

மன்னராட்சியில், மக்களின் குறைகளை யறிவதற்காக மன்னர்கள் மாறு வேஷம் போட்டுக் கொண்டு போவார்களாம். மக்களாட்சியிலோ, மக்களே போய்க் குறை களைக் கூறினாலும் கேட்பதற்கு ஆளில்லை!

— கலாமூர்த்தி





**'அவர்கள் ஏழு பேர். அரசாங்கத்தைக் கவிழ்க்க முயலும் அராஜகவாதிகள். அவர்களிலொருவன், அரசாங்க உளவாளி என்று தெரிகிறது. இன்னும் சில நாட்களில், இன்னொருவனும் அரசாங்க உளவாளி என்று தெரிகிறது. கடைசியாக ஏழு பேருமே அரசாங்க உளவாளிகள் என்பது புலனாகின்றது. அராஜகவாதிகளை இன்னும் தேடிக் கொண்டிருக்கின்றனர்!'**

**(வேதபுரத்துக் கதையொன்று. ஆசிரியர் பெயர் தெரியவில்லை)**

நஞ்சுண்டன் போன பிறகு, அபூர்வா வனிதாவிடம் கேட்டான் : "நீ நஞ்சுண்டனைப் பத்தி என்ன நினைக்கறே?"

பாதி கண்ணயர்ந்தாற் போல், சோபாவில் சாய்ந்து உட்கார்ந்திருந்த வனிதா, லேசாகத் திடுக்கிட்ட நிலையில் கேட்டாள்: "என்ன கேக்கறீங்க?"

"ஒண்ணுமில்லே, தூங்கு."

வனிதா, சாய்ந்த நிலையிலிருந்தும் மீண்டு, சரிவர உட்கார்ந்தாள்.

"நஞ்சுண்டன் எனக்குத் தெரிஞ்ச மட்டும், நல்ல படிப்பாளி, ஆழமானவரு... தான் நினைக்கிறதைச் செய்து முடிக்கக்கூடிய ஆளுங்கிற மாதிரி தான் எனக்கு அப்பொ பட்டுது... இப்பொ புரிய மாட்டேங்குது... எதுக்காக இப்படிச் செய்றாரு, அல்லது அப்படிச் செய்யும்படியா அவருக்கு நிர்ப்பந்தமா, ஒண்ணும் புரியலே..."

"முதல்லே நான் அவரை பரவச அம்மன் கோயில் தெரு வீட்டிலே பார்க்கப் போன போது, உன்னை அந்த வீட்

17

# இந்திரா பார்த்தசாரதி

டிலே இருக்கச் சொன்ன மாதிரி..." என்று கூறிவிட்டு அவனைக் கூர்ந்து நோக்கினாள் அபூர்வா.

வனிதா இரண்டாவது தடவையாகத் திடுக்கிட்டாள். "என்ன சொல்றீங்க?"

"புரியலையா?" என்று சிரித்துக் கொண்டே வினவினாள் அபூர்வா.

வனிதா சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். "சரி, வச்சுக்கங்க, அந்த மாதிரி," என்றாள் புன்னகையுடன்.

"வச்சுக்க வேணாம்... நீதான்னு எனக்குத் தெரியும்... ஏன் அப்படி உன்னை அங்கே போகச் சொன்னாரு, அப்படிச் செய்யச் சொன்னாருன்னு உனக்குத் தெரியாதுங்கிறதும் எனக்குத் தெரியும். அவருக்கும் தலைவருக்குமுள்ள சம்பந்தம் பத்தி உனக்கு ஏதாவது யூகங்கள் இருக்கா, தெரிஞ்சா சொல்லு."

"சத்தியமா தெரியாதுங்க. யூகிக்கிற அளவுக்கு நான் புத்திசாலியுமில்லே..."

"அவர் போறப்போ, 'விஷயம் சுவாரஸ்யமாகிக் கொண்டு வருது'ன்னாரே, ஏன் அப்படிச் சொன்னாரு?"

"எனக்கும் புரியலே... சரி... நான் தூங்கப் போறேன், ஒரு ராத்திரி பூரா இருக்குது, நீங்க யோசியுங்க..." என்று சொல்லிக் கொண்டே அவள் எழுந்து உள்ளே போனாள்.

வனிதா சொன்னது போல் இரவு முழுவதும் இருந்தது. ஆனால் அபூர்வாவால் யோசிக்க முடியவில்லை. நல்ல அசதி, தூங்கி விட்டான்.

**கா**லையில் எழும் பொழுது மணி ஏழு. அவன் ஐந்தரை மணிக்கே எழுந்து உடற்பயிற்சிகள் செய்வது வழக்கம். இன்று நேரமாகி விட்டது, செய்ய முடியாது.

காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, அவன் 'ஹாலு'க்கு வந்தான்.

செய்தித்தாள்களைப் புரட்டிக் கொண்டிருந்த வனிதா சொன்னாள் : "நோ நியூஸ்."

"எதைப் பத்தி?"

"எதைப் பத்தியா? நேத்து நஞ்சுண்டன் சொன்னாரே, இன்னி பேப்பர் பூரா உங்களைப் பத்திதான்னு, ஒரு பேப்பர்லயாவது ஏதாவதிருக்குமான்னு பாக்கறேன்... ஒண்ணுமில்லே... தலைவர் நீண்ட நாள் வாழணும்னு அமைச்சர் நாகய்யன் கோயில்லே அங்கப்பிரதட்சணம் பண்ணாராம், அதான் நியூஸ்... அவ்வளவு பெரிய உடம்பை வச்சுக்கிட்டு, எப்படிப் பண்ணாரோ, தெரியலே..."

"அவர் தலைவருக்காக அப்படிச் செய்தாருங்கிறது நியூஸ் இல்லே, எல்லா அமைச்சரும் செய்றாங்க. ஆனா, அவ்வளவு பெரிய உடம்பை வச்சுக்கிட்டு அவர் அப்படிச் செய்ததுதான் நியூஸ். அது கிடக்கட்டும்... நாம இந்திரபிரஸ்தம் போயிட்டு வந்ததைப் பத்தி ஏன் இருட்டடிப்பு செஞ்சிருக்காங்க?"

"நேத்து நஞ்சுண்டன் எல்லா பேப்பரிலயும் வரும்னு சொன்னாரு. ஆனா..."

"அவரே இருட்டடிப்புச் செய்திருக்கலாம்... நான் நேத்து அப்படிச் சொன்னப்புறம்."

"எனக்கு நீ அப்படிச் செய்யறது சரின்னு படலே... நாம இங்கேதான், வேதபுரத்திலேதான் இருக்கப் போறோம்... தலைவரைப் பகைச்சுகிட்டிருக்க முடியுமா?"

"விஷயம் சுவாரஸ்யமாகிக் கொண்டு வருதுன்னு நஞ்சுண்டன் ஏன் சொன்னாரு? தலைவருக்கு ஓர் எதிர்ப்பு உருவாகிட்டு வருதுங்கிறதைப் பத்தி அவர் சந்தோஷப்படற மாதிரில்லே இருந்தது?"

"யாரோட ஆதரவை நம்பி நீங்க தலைவரை எதிர்ப்பீங்க? இந்திரபிரஸ்தத்துத் தலைவரோட கட்சி ஆளுக, நஞ்சுண்டன் சொன்ன மாதிரி 23 பேரு! அவங்க ஒவ்வொத்தனும் அவனவன் கட்சி. யாரை நம்பி நீங்க...."

அபூர்வா இடைமறித்தான். "நஞ்சுண்டனை."

"நஞ்சுண்டனா?

**வேதபுரத்து வியாபாரிகள்**

அவர்தானே இப்போ இந்த நியூஸைப் பேப்பர்லே வராமே இருட்டடிப்புச் செய்திருக்காரு? அவரை எப்படி நம்பலாம்?"

"நம்பலாம்னு ஒரு உள்ளுணர்வு, அவ்வளவுதான்."

அப்பொழுது டெலிஃபோன் ஒலித்தது. வனிதா எடுத்தாள்.

"யாரு? அப்படியா....? இருங்க, கேட்டுச் சொல்றேன்."

வனிதா, அபூர்வாவை நோக்கிச் சொன்னாள்.

"தரங்கம்பாடி தட்சிணாமூர்த்தி... பாக்கணுமாம் உங்களை."

"யார் அவரு?" என்றாள் அபூர்வா.

வனிதா சைகையினால் ஏதோ சொல்ல முயன்றாள்.

அபூர்வாவுக்கு விளங்கவில்லை.

வனிதா மறுபடியும் சற்று ஆவேசமாகச் சைகை செய்தாள்.

"என்ன சொல்றே? சரி வரச் சொல்.... நீ சைகை செய்யறதை பார்த்தா ஒரு முக்கியமான ஆள் மாதிரி தெரியுது."

"சரி, வாங்க" என்று கூறிவிட்டு, டெலிஃபோனைக் கீழே வைத்தாள் வனிதா.

"இந்தப் பிரஸ்தத்துத் தலைவர் கட்சியோட, இங்குள்ள 23 தலைவர்களிலே முக்கியமான ஒத்தரு. மொத்த கட்சி ஆளுகளும் 23 தான். கணக்கை 'கரெக்டா' சொல்ல வேணாமா?" என்று சொல்லிக் கொண்டே சோபாவில் உட்கார்ந்தாள் வனிதா.

"எப்போ வராரு?"

"இதோ வந்துடுவாரு.. நீங்க 'ரெடி'யாகுங்க."

ஒரு மணி நேரம் கழித்து வாசல் மணி ஒலித்தது.

வனிதாவைத் தொடர்ந்து வந்தவருக்கு அறுபது வயதிருக்கலாம். தலைமயிரைக் கறுப்பாக்கியிருக்கிறார் என்று தெரிந்தது. நீண்ட கதர்ப்பட்டு ஜிப்பா, வேட்டி, தடித்த ஃப்ரேம் போட்ட கண்ணாடி. மூவண்ணக் கரையுடன் கூட நீண்ட அங்கவஸ்திரம்.

"வணக்கம், நான்தான் தட்சிணாமூர்த்தி."

"தரங்கம்பாடி தட்சிணாமூர்த்தி" என்றாள் அபூர்வா.

"கரெக்ட்," என்று ஆமோதித்தவாறு புன்னகை செய்தார்.

"உக்காருங்க."

மின் விசிறி வேகமாகச் சுற்றிக் கொண்டிருந்தாலும் அவருக்கு வியர்த்தது. அங்கவஸ்திரத்தினால் முக வியர்வையை ஒத்தி எடுத்தார்.

"மேலேயிருந்து எனக்குச் செய்தி வந்தது. உங்களைப் பாக்கச் சொல்லி."

"மேலேயிருந்துன்னா? 'லோகல் மேலே'யா, இல்லாட்டா, 'எல்லாத்துக்கும் மேலே'யா?"

"எல்லாத்துக்கும் மேலே'ன்னா?" என்றார் த.த.

அபூர்வா ஆகாயத்தை ஆள் காட்டி விரலினால் சுட்டிக் காட்டினாள்.

"என்னங்க, இப்படிச் சொல்றீங்க? நான் சொல்றது இந்திர பிரஸ்தம்."

"லோகல் மேலேக்கும் மேலே அப்படித்தானே?"

"ஆமாம்.... நம்ம கட்சி இப்போ ஓரளவு பிரபலமாயிட்டு வந்துக்கிட்டிருக்குது. புள்ளி விவரக்கணக்கின்படி, மக்கள்... ஆதரவு .7%லிருந்து .732% ஆக உசந்திருக்குது. நீங்களும் கட்சியிலே சேர்ந்தீங்கன்னா..."

".7321% ஆக உயர வாய்ப்பு இருக்குது," என்றாள் வனிதா.

த.த. அவளை முறைத்துப் பார்த்தார்.

"அவ என் செகரட்ரி... நீங்க சொல்லுங்க."

"முதல்லே ஜனங்களுக்கு 'ஜனநாயகம்'னா என்னன்னு சொல்லணும்... பல எதிர்ப்புகள் இருக்கும், அடக்குமுறை இருக்கும், நாம அதை சமாளிச்சாவணும்."

"உங்க கட்சியிலே ஜனநாயகம் பரிபூரணமா இருக்குன்'னு கேள்விப்பட்டேன். 23 அங்கத்தினர்கள், அவங்க 23 பேருமே தலைவர்கள்னு சொன்னாங்க...."

"இது ஆளுங்கட்சி கட்டிவிட்ட புரளி. 200023 பேர் அங்கத்தினர் இருக்காங்க... உங்களைச் சேர்த்தா 200024."

"என்னை எதுக்குச் சேர்க்கறீங்க?"

"இந்திர பிரஸ்தத்திலே நீங்க எங்க தலைவர் முன்னிலையிலே எங்க கட்சியிலே சேர்ந்தாச்சுன்னு எனக்கு அந்தரங்கத் தகவல் நேத்து வந்தது. எனக்குன்னா, எனக்கு மட்டுந்தான்."

"எனக்குத் தெரிஞ்சு 23 பேர்தான், ரெண்டு லட்சம் பேர் கூட்டிச் சொல்றீங்களே?" என்றாள் வனிதா.

"அவங்க சும்மா இப்பொழுதைக்கு ஆளுங்கட்சியிலேருக்காங்க, ஆனா அவங்க எங்க கட்சி ஆளுகதான். சமயம் வந்தா வெளி



திருடன் 1 : ஆயிரம்தான் இருந்தாலும் நீ பக்கத்து வீட்லயே திருடியிருக்கப்படாது!

திருடன் 2 : புண்ணாக்கு மாதிரி பேசாத... பக்கத்து வூட்ல தொள்ளாயிரம் ரூபாதான் இருந்துச்சு!

- கொங்கணாபுரம் வே. செந்தில்



**பண்டிகைக் காலம் வருகிறது...**
**பல குடும்பங்களில்**
**மகிழ்ச்சிக்குக் காரணம் —**



# POFL நிறுவனத்தில் முதலீடு,
## நீங்களும் அதைப் பின்பற்றலாமே ?

இந்த பண்டிகைக் காலத்தில் உங்கள் உற்சாகம் பொங்கி வழியட்டும். அன்புக் குடும்பத்தினருக்கும் அருமை நண்பர்களுக்கும் அன்பளிப்புகள் தந்து மகிழுங்கள் குதூகலமாய்க் கொண்டாட முன்கூட்டியே திட்டமிடுங்கள் — இதற்கு வழி காட்டுகிறது POFL

பயனீர் ஓவர்ஸீஸ் ஃபைனான்ஸ் லிமிடெட் — பல்வேறு நிதித்துறை சேவைகளை உங்களுக்கு வழங்குகிறது. இது, இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்கின் ஈக்விட்டி பங்கேற்புடன், பயனீர் ஏஷியா குரூப் மற்றும் ஸ்டாண்டார்ட் ஃபயர் ஒர்க்ஸ் நிறுவனங்களால் தொடங்கி நடத்தப்படுவதாகும்.



**உங்கள் பணத்தை முதலீடு செய்ய மிகமிகப் பாதுகாப்பான வழி — பயனீர் ஓவர்ஸீஸ் ஃபைனான்ஸ் லிமிடெட்.**



POFL எத்தனையோ முதலீட்டாளர்களில் நீங்களும் ஒருவர் என்ற எண்ணம் இங்கு கிடையாது. ஒவ்வொருவரையும் எங்கள் குடும்பத்தின் ஓர் உறுப்பினராகவே கருதுகிறோம். திருப்தி அடைந்த டெபாசிட்தாரர்கள் கொண்ட மிகப் பெரியதோர் அமைப்பில் நீங்களும் ஓர் அங்கம் என்பதை நீங்களே விரைவில் உணர்வீர்கள். மகிழ்ச்சி நிறைந்த இந்தக் குடும்பத்தில் சேருங்கள் — எந்தவிதக் கவலையும் இல்லாமல் பண்டிகையைக் குதூகலமாய்க் கொண்டாடுங்கள்.



**பயோனியர் ஓவர்ஸீஸ் ஃபைனான்ஸ் லிட்**

**கிளை அலுவலகம் :** ஃப்ளாட் எண் 7 & 8, 2-வது மாடி,
அப்பாசாமி டவர்ஸ், 17 & 18, தியாகராயர் ரோடு, தி.நகர், சென்னை 600 017.
தொலைபேசி : 4345170, 4345173

**கார்ப்பரேட் அலுவலகம்:** மதுரை

**கிளைகள்:** ● மதுரை (வடக்கு வெளி) ● பெங்களூர் ● கோயம்புத்தூர் ● சேலம் ● திருச்சி ● சிவகாசி ● காரைக்குடி ● திருநெல்வேலி ● தூத்துக்குடி

**வளமையில் பங்குபெற வாய்ப்பு அளிக்கும் முன்னோடி**




யேறக் காத்துக்கிட்டிருக்காங்க.''

'சமயம்'னா?''

த.த. சிறிது நேரம் பேசாமலிருந்தார்.

''சொல்ல வேணாம்னா, பதில் சொல்ல நான் வற்புறுத்தலே... வனிதா, காப்பி கொண்டு வா.''

''காப்பில்லாம் வேணாங்க.. உங்களுக்கே தெரிஞ்சிருக்கும், என்னை வேவு பாக்க நீங்க...''

''புரியலே.''

''புரியலேன்னா விடுங்க. உங்களை எங்க கட்சி சார்பிலே தேர்தல்லே நிறுத்தி வைக்கப் போறதா சொன்னாங்க... இதற்கு லோகலா எங்க கட்சியிலேயே எதிர்ப்பு இருக்கலாம். ஆனா அதைச் சமாளிக்கிறது என் பொறுப்பு.''

''ஏன் எதிர்ப்பு?'' என்றாள் வனிதா.

''நீங்க ஆளும் கட்சி சார்பிலே நிக்கப் போறதாத்தான் எல்லாருக்கும் தெரியும். திடீர்னு, இப்படிக் கட்சி மாறி... நீங்க மாறலே, அஃப் கோர்ஸ்... எங்க கட்சிக்கு நீங்க தேவை... உங்களை யார் நம்ம கட்சி ஆளுக எதிர்க்கப் போறாங்கன்னு நீங்க யோசிக்கலாம். இருக்காங்க, அவங்கதான், இந்தத் தலைவராலே, விலைக்கு வாங்கப்பட்ட கைக்கூலிக, அதான் வேதபுரத்துத் தலைவராலே, 23 பேரிலே 22 பேர்! சட்டசபையிலேருக்கிற 15 பேரையும் அவங்களோட சேத்துக்கலாம்'' என்றார் த.த. பெருமூச்சுடன்.

''அப்பொ நீங்க ஒத்தர்தான், இந்திரபிரஸ்தத்துத் தலைவரோட கட்சியைச் சேர்ந்தவரு...''

''ஆமாம், உங்களைச் சேர்த்தா ரெண்டு..''

''அந்த 2 லட்சம் பேர் சொன்னீங்களே, அவங்க?''

''அவங்க நம்ம கட்சியிலே சேர இருக்கிறவங்கிறது பரம ரகஸ்யம். இது யாருக்கும் தெரிய வேணாம்'' என்றார் த.த.

''இத வெளியிலே போய் நான் சொல்லு வேனா? உங்க கட்சியிலே 2 லட்சம் பேரு இருக்காங்கன்னு நான் சொன்னேனா, என்னைப் பத்தி என்ன நினைச்சுப்பாங்க?'' என்றாள் அபூர்வா, குரலில் கிண்டலின் சாயை துளிக்கூட தெரியாமல்.

''அதென்ன, உங்க கட்சிங்கிறீங்க, நம்ம கட்சின்னு சொல்லுங்க... இந்திர பிரஸ்தத்திலேந்து என்னை மட்டும் கூப்பிட்டு, நம்பிக்கையான ஆளுன்னு விஷயத்தைச் சொல்லியிருக்காங்க, நீங்க நம்ம கட்சியிலே சேர்ந்துட்டீங்கங்கிற விஷயத்தை... அப்படியிருக்க நப்போ...''

அப்பொழுது வாசல் மணி ஒலித்தது. வனிதா எழுந்து திறக்கச் சென்றாள், உள்ளே நுழைந்தவருக்கு ஐம்பது வயதிருக்கும். கதர் அரைக் கைச் சட்டை, தலையில் காதோரங்களில் மட்டும் கறுப்பு மயிர் வரப்பு கட்டியிருந்தது. மூக்கருகே தெரிந்தது ஒரு சிறிய கம்பளிப்பூச்சி. அது ஊரவில்லை என்பதிலிருந்து அது மீசை என்று தெரிந்தது.

அவர் வந்ததும் த.த. முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார். வந்தவர் த.த.வைக் கவனிக்கவேயில்லை.

''வணக்கம். என் பேரு மாணிக்கவேலு. அம்மா எங்க கட்சியிலே சேர்ந்துட்டீங்கன்னு நேத்து எனக்கு மேலிடத்திலிருந்து அந்தரங்கச் செய்தி வந்தது. அதனாலே உங்களைப் பாக்க வந்தேன்.''

''இவருக்கும் வந்திருக்குது'' என்று த.தா.வைச் சுட்டிக் காட்டினாள் அபூர்வா.

அப்பொழுதுதான் அவர் த.த.வைப் பார்த்தார்.

''அடே... நீங்களா? உங்களுக்கும் வந்ததா? நான் டெலிஃபோன் பண்ணிட்டு வரலாம்னு தானிருந்தேன். என் ஃபோன் வேலை செய்யலே.''

அவர் த.த. அருகில் உட்கார்ந்தார்.

''எங்க கட்சித் தலைமையை ஏத்துக்கிட்டு நீங் நடத்தனும்....'' என்றார் மாணிக்கவேலு.

அப்பொழுது டெலிஃபோன் ஒலித்தது. வனிதா ஃபோனை எடுத்தாள்.

''சரி வாங்க.''

''என்ன?'' என்று கேட்டாள் அபூர்வா.

''கிருஷ்ணராஜ்.. அவருக்கும் அந்தரங்கமா இந்திர பிரஸ்தத்திலிருந்து டெலிஃபோன் வந்ததாம். வரலாமான்னாரு; வாங்கன்னேன்.''

த.த.வும் கிருஷ்ண ராஜுவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். இன்னும் 20 பேர் இருக்காங்கில்லே? அவங்க கிட்டேயிருந்தும் டெலிஃபோன் வரட்டும், அவங்களுக்கு மட்டும் அந்தரங்கச் செய்தி மேலிடத்திலிருந்து வந்திருக்காதா என்ன? அவங்களும் வரட்டும், கட்சிக் கூட்டத்தை இங்கேயே வச்சுக்கலாம்,'' என்றாள் அபூர்வா.

த.த.வின் முகம் சிவந்தது.

அவர் எழுந்தார். ''நான் அப்போ வர்றேன்.'' என்று சொல்லிக் கொண்டே பதிலை எதிர்பார்க்காமல் வெளியே சென்றார்.

(தொடரும்)

# காத்திருத்தல்

பிரதிபா ஜெயச்சந்திரன்

**மா**னிட்டர் முன் அமர்ந்து கீ போர்டில் விரல் பரப்பி துரிதமான இயக்கத்தில் கம்போஸிங் நடந்து கொண்டிருக்கும். ஒரு ஸிட்டிங் அமர்ந்து விட்டால் குறைந்தது அரை மணி நேரமாவது வெளியே வர மாட்டான். வெளியில் கிடந்த இருக்கையில் அமர்ந்திருந்தபோதிலும் மனம் நிலை கொள்ளவில்லை.

ஒவ்வொரு நிமிடமும் இப்போது வந்து விடுவானோ என்பது போல் தவிப்புடன் எதிர்பார்த்துக் காத்திருத்தல் எவ்வளவு வேதனையானது!

ரிசப்ஷனிஸ்டிடம் சொல்லியாச்சு. அவளும் தூரத்திலுள்ள இருக்கையில் என்னை அமரச் சொல்லி விட்டு இன்டர்காமில் செக்ஷனுக்குத் தகவல் கொடுத்தாள். நான் வந்திருக்கிறேன் என்று. சொன்னால் ஓடி வந்திருக்க மாட்டானா? பையில் அவனுக்காக வாங்கி வைத்திருந்த மில்க் சாக்லெட் கனத்துக் கொண்டிருந்தது.

நேரம் ஓடிக் கொண்டிருந்தது. நேரத்தைச் சார்ந்து வாழ்கிற வாழ்க்கை என்ன வாழ்க்கை? நேரம் எனக்கு எஜமானாக இருக்கக் கூடாது. அது என்னைத் துரத்திக் கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு நிமிடத்திலும் தன் வெற்றிச் சாட்டையைச் சொடுக்கி, என் நிமிஷங்களை விழுங்கிக் கொண்டிருக்கிறது. நான் வந்திருக்கிற விஷயம் தெரிந்திருந்தால் அவன் இவ்வளவு நேரம் தாமதித்திருக்க மாட்டான்.

வாரத்தில் ஒரே ஒருமுறை கிடைக்கும் அதிஅற்புத நிமிஷங்கள். நான் அதை இழக்க எப்படி சம்மதியில்லையோ அதே போல் தான் அவனும்.

ஏன் விடிந்தது என எழுந்து, அரைமணியில் அனைத்து வேலைகளையும் முடித்து விட்டு, சூடுபறக்க இட்லித் துண்டங்களை விழுங்கி விட்டு ஒரு கி.மீ. தொலைவிலுள்ள தர்மஷாலா ஸ்டாப்பிங்கிற்கு நடந்து வந்து 'கேறி, கேறி, அடக்கேறி' என்ற கண்டக்டர்களின் வற்புறுத்தலில் அவசரமாய் பஸ் ஏறி 'சங்கம்' பஸ் ஸ்டாப்பில் இறங்கி அவதி அவதியாய் 'பாப்பினிஸ்ஸேரி' ரயில்வே ஸ்டேஷனை அடைந்து எட்டேகால் கண்ணூர் - மங்களூர் பாஸஞ்சரில் ஏறி அமர்ந்தால் - அப்பாடா - பழையங்காடி வரும் வரை லேசாக இரவல் தினசரியில் எட்டிப் பார்த்து பின் கண்ணயர்ந்து தூங்கிப் போய் - காஞ்ஞங்காடு ஜங்ஷனில் இறங்கி, மீன் கடை சந்து வழியாக வேகமாய்ப் போனால் பத்து நிமிடத்திற்குள் வாழ்க்கையின் லட்சியத்தை அடையலாம் - ஆபீஸ் வந்து விடும்.

ஏதேனும் கூட்ஸ் வண்டி எதிரே வந்து ஸிக்னலுக்காக ட்ரெயின் நின்று விட்டால் ஒரு மணி நேரம் தாமதம்தான். பெரிதாக சலாம் வைத்து பல்லெல்லாம் திறந்து வழிந்து மானேஜர் முன் 'ஸாரி சார், லேட்டாயிடுச்சு' - 'ட்ரெய்ன் லேட்' சொல்லி அன்னிய மனுஷனைப் போல் அலுவலகத்திற்குள் நுழைவது மிகவும் கொடுமையான ஒன்று. இந்தக் கொடுமை அவ்வப்போது நிகழும். ரயிலில் பயணிக்கும் நேரம் தவிர மற்ற நேரங்கள் எப்போதும் சிறகடித்துப் பறக்கும் நிமிஷங்கள்தான்.

சரியாக மாலை 5.40க்கு மீண்டும் ரயில். அதைப் பிடித்தால்தான் குறைந்தபட்சம் இரவு 9 மணிக்காவது வீடு போய்ச் சேர முடியும். அதை விட்டு விட்டால், பஸ் பிடித்து இரவு 11 மணிக்குப் போய்ச் சேரலாம். மழைக் காலங்களில் பஸ்ஸும் கிடையாது. இரவு முழுவதும் நிலைகொள்ளாத பாடுதான். அம்மா, அப்பாவுக்கோ தம்பி, தங்கைகளுக்கோ பதில் சொல்லி மாளாது. இரவு முழுவதும் ஒருவரும் சாப்பிட மாட்டார்கள். தூங்கவும் மாட்டார்கள். என்னால் நாலைந்து ஜீவன்கள் வீட்டில் இரவு நிம்மதியிழக்க வேண்டுமா? ஐந்தே காலுக்கே ஸ்டேஷனில் ஆஜர்தான்.

அவள் எப்போது எனக்கு அறிமுகமானாள் என்று இன்னும் நன்றாக ஞாபகமிருக்கிறது.

நல்ல ரோஜாப்பூ நிறம். ரோஜாப்பூ நிறத்தில் புடைவை உடுத்தியிருந்தாள், ரோஜாப் பூவை ரோஜாப் பூக்களுக்கு மத்தியில் வைத்திருப்பது போல். அழகில்லை என்று சொல்ல முடியாத சுமாரான முகச் சாயல். கேரள மண்ணுக்கேயுரிய வாளிப்பான உடல்

வாகு. ஸ்டேஷனில் வெயிட்டிங் ஹாலில் அமர்ந்து, மிகவும் கவன மாக ஒரு புத்தகத்தை வாசித்துக் கொண்டிருந் தாள். புத்தகத்தின் அட் டையிலிருந்த மலையாள அக்ஷரங்களை கவனத்து டன் வாசித்தால் வைக் கம்முஹம்மது பஷீர் என்றிருந்தது. எனக்கு ஆச்சரியம். நல்ல புத்த கங்களைத் தேடிப் படிக் கும் நல்ல வாசகியாக இருக்க வேண்டும்.

தினமும் வழியில் எத்தனையோ முகங்க ளைப் பார்க்கிறோம். ஒருசில முகங்கள் தானே நம்மை மீண்டும் பார்க் கத் தோன்றுகிறது. இவள் முகம் அப்படி.

அதன் பின்னர் ஓரிரு நாட்கள் கழித்து அதே போல் மாலை வேளையில் வெயிட்டிங் ஹாலில் Zen and the art of Motor Cycle Maintenance புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். அவள் மேல் ஒரு பிரத் யேக கவனம் விழுந்தது.




சில நாட்கள் கழித்து அவள் கையில் ஒரு கவி தைப் புத்தகம் - 'STILL WATERS OF THE AIR'. ஸ்பானிய மொழிக் கவி தையின் மொழிபெயர்ப்பு நூல். இந்த முறை என்னால் சும்மாயிருக்க முடியவில்லை. தேடிப் பிடித்துப் படிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்த புத்தகங்களில் இதுவும் ஒன்று. லோர்க்காவின் கவிதைகள் அடங்கிய புத்தகம். அந்தப் புத்தகத்தைப் படிக்க வேண்டும். அதற்காகவாவது அவ ளோடு நட்புக் கொள்ள வேண்டும்.

'எக்ஸ்கியூஸ் மி.'

'யெஸ்' - என்ன வேண்டும் என்பது போல் பார்த்தாள்.

'நான் ஜெயன். நீங்கள் வைத்திருக்கும் புத்தகம் ஒருநாள் எனக்குத் தந்தால் நான் ஜெராக்ஸ் எடுத்து விட்டுக் கொடுத்து விடு கிறேன். இது நல்ல புத்தகம். லோர்க்காவின் கவிதைகள் எனக்கு ரொம்பவும் பிடிக்கும். உங்களுக்கு ஆட்சேபணை இல்லையென் றால் எனக்கு ஒருநாள் தருகிறீர்களா?' என்று சொல்லி என் விஸிட்டிங் கார்டை நீட்டி னேன்.

அவள் கார்டை வாங்கிப் பார்த்து விட்டு திரும்பக் கொடுத்து விட்டாள். எனக்கு அவமானமாக இருந்தது.

'இந்தப் புத்தகத்தை உங்களிடம் தருவது பற்றி எனக்கு ஆட்சேபம் இல்லை. ஆனால் என்னால் மீண்டும் பதினைந்து நாள் கழித் துத்தான் உங்களை கான்டாக்ட் பண்ண முடியும். எனக்கு ஷிஃப்ட் மாறுகிறது' என்று சொல்லி விட்டு யோசித்தாள். 'சரி, அடுத்த முறை பார்க்கும் போது வாங்கிக் கொள்கி றேன்' என்று சொல்லி புத்தகத்தைக் கொடுத் தாள்.

நான் 'தாங்க்ஸ்' என்றேன். வண்டி வந்து விட்டது. இருவரும் பிரிந்தோம். அவள் எந்த ஸ்டேஷனில் இறங்கியிருப்பாள் என்று என்னால் அனுமானிக்க முடியவில்லை.

அடுத்த பதினைந்து நாட்களும் தினமும் அந்தப் புத்தகத்தை எடுத்து வந்து மீண்டும் கொண்டு சென்றேன். 'ஹால்மார்க்'கின் 'தேங்க்யூ' கார்டு ஒன்றை வைத்திருந்தேன் தயாராக - எப்போது அவளைக் காண நேர்ந்தாலும் கொடுப்பதற்காக. அவள் சொன்ன படியே பதினைந்து நாட்கள் கழித்து வழியில் தென்பட்டாள். அவளை தூரத்தில் பார்த்த வுடனேயே ரயில் ஏறும் பரபரப்பு என்னைத் தொற்றிக் கொண்டது. அவள் நெருங்க நெருங்க, நான் வசமிழந்து, வலுவிழந்து போனேன். நான் அவளைப் பார்த்துப் பெரிதாகப் புன்னகை செய்தேன் - அவள் அளவாக.

இப்படித் தொடர்ச்சியான நல்ல புத்தகங்களின் பரிமாற்றம் எங்களை நட்பையும் தாண்டிய ஓர் இனிமையான அந்தரங்க வட்டத்திற்குள் நிறுத்தியது. 'எரிக்ஃப்ரோமும்', 'ஈக்கோ'வும் எங்கள் பேச்சில் இருந்தாலும் அதையும் மீறிய கள்ளப் பார்வைகள் எங்களின் முகவிலாசங்களை ஒருவருக்கொருவர் அடையாளம் காட்டின.

நிதானமாய் ஒருநாள் பேசலாம் என்று எங்களுக்குள் முடிவு செய்து கொண்டு, 'பேக்கல் ஃபோர்ட்'டுக்குச் சென்றோம். மிக ரம்மியமான பச்சைப் புல்வெளியும் எப்போதேனும் பட்டுச் சிலிர்த்திட வைக்கும் மிதமான சாரலும் ஒரு வகையான மயக்கத்தைக் கொடுத்து, எங்களை இன்னும் நெருங்க வைத்து விட்டன.

நூறு மீட்டர் உயரத்தில் விளிம்பில் நின்று கொண்டு மேற்குக் கடல் அலைகளின் உக்கிரத்தை அனுபவித்தோம். பேசலாம் என்று போய் விட்டு ஒன்றுமே பேசாமல் ஏக்கத்துடன் திரும்பினோம்.

நினைத்து நினைத்து அசைபோட அந்த நாளின் நிகழ்வுகள் மனதுக்குள் குழைவாய் ஒரு மிருதுத் தன்மையை ஏற்படுத்தி, அவள் மேல் மேலும் வாஞ்சையை ஏற்படுத்தியது. ஒன்றுமில்லையென்றால் ஒன்றுமில்லைதான். அப்படி ஒன்றுமில்லையென்று பெரிதாக வெளியில் ஜம்பம் அடித்துக் கொண்டாலும் மனதுக்குள் அவளைக் காண ஏங்கிக் கிடந்தே - ஒன்றுமில்லையோ?

இல்லை நிறைய உண்டு. அவளிடம் நான் கொடுப்பதற்காக, என்னிடம் அவள் தருவதற்காக நிறைய நிறைய உண்டு. எங்களின் நெருக்கம் அதிகமாக ஆக பிரமிப்புகளின் முடிச்சுகள் ஒவ்வொன்றாய் அவிழ்ந்து வந்




# TAMILNADU PEOPLE'S BENEFIT FUND (PURASAWALKAM) LTD.,

79, Perambur Barracks Road, Purasawalkam, Madras - 600 007.
Central Government Approved (Reg. No.18-21907/91). ☎ 5323360

## DEPOSIT SCHEME

| | 46 Days | 3 Months | 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|---|---|---|---|
| FIXED DEPOSIT | 13% | 14% | 15% | 17% | 18% | 19% | 20% |

## 20% FOR SENIOR CITIZEN SPECIAL SCHEME

**for Rs.10,000/- and above 1 year**

*Your Deposit Doubles in 45 months Triples in 72 months.*

| | Rs. | 1 Year | 2 Years | 3 Years | 45 Months | 72 Months | 90 Months |
|---|---|---|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000 | 1,180<br>5,920 | 1,430<br>7,150 | 1,730<br>8,650 | 2,000<br>10,000 | 3,000<br>15,000 | 4,000<br>20,000 |

## "TAMIL MAHAL SELVAKALANCHIZAM" SCHEME

| | Rs. | 10 Years | 15 Years | 18 Years |
|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000<br>10,000 | 6,500<br>32,500<br>65,000 | 16,000<br>80,000<br>1,60,000 | 28,000<br>1,40,000<br>2,80,000 |

## "TAMILARASAN PORKUVIYAL" SCHEME

| | | | |
|---|---|---|---|
| ரூ. 7500/- மட்டும் செலுத்தி 15-ஆம் ஆண்டு முடிவில் ரூ.1,25,000 பெறுவீர் | ரூ. 25,000/- மட்டும் செலுத்தி 5-ஆம் ஆண்டு முடிவில் ரூ.72,000 பெறுவீர் | ரூ. 35,000/- மட்டும் செலுத்தி 5-ஆம் ஆண்டு முடிவில் ரூ.1,00,000 பெறுவீர் | ரூ. 9,000/- மட்டும் செலுத்தி 21-ஆம் ஆண்டு முடிவில் ரூ.1,50,000 பெறுவீர் |

## "SENTAMIL SELVAKUVIYAL" SCHEME ஒரு முதலீடு செய்து பெரும் பணம் பெறுவீர்.

| | Rs. | 21 Years | |
|---|---|---|---|
| ரூ. 500/- மட்டும் செலுத்தி 21-ஆம் ஆண்டு முடிவில் ரூ.35,000 பெறலாம் | 500<br>250 | 35,000<br>17,500 | ரூ. 250/- மட்டும் செலுத்தி 21-ஆம் ஆண்டு முடிவில் ரூ.17,500 பெறலாம் |

| | Rs. | 12 Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|---|---|
| RECURRING DEPOSIT | 50<br>100 | 660<br>1,320 | 1,430<br>2,860 | 2,360<br>4,720 | 3,600<br>7,200 | 5,030<br>10,060 |

| | | |
|---|---|---|
| **கடன்** | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்<br>சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும். | வட்டி விகிதம் ரூ.1.75 |

## SAVINGS DEPOSIT INTEREST RATE 10% P.A.

கொடுக்கல் வாங்கல் ரூ.1/- செலுத்தி பங்குதாரர்களாகிறவர்களிடம் மட்டும்

Weekly Holiday Friday

Working Hours : Week Days 8.30 a.m. to 5.00 p.m. Sunday : 8.30 a.m. to 1.00 p.m.

| | | |
|---|---|---|
| **V. KRISHNAMOORTHY** B.A., BL.,<br>Secretary | **A. THIAGARAJAN** M.A.,<br>Executive Director | **R. SUBRAMANIAN** B.SC., B.L.<br>President |

# நான் என்ன பாவம் செய்தேன்

சிசுக்கள் தெய்வத்திற்கு சமம். அந்த தெய்வங்களையே இன்று கை, கால் உடைத்து குப்பையில் எறியும் கொடுமை நம் தாய்திருநாட்டின் தாய்மார்களுக்கு கைவந்த கலையாகி விட்டது. இப்படி குப்பைத்தொட்டி, சாக்கடை போன்ற இடங்களில் கைவிடப்படும் சிசுக்களை காப்பாற்றி நல்ல பிள்ளைகளாக வளர்க்க பாடுபடுகிறது உதவும் கரங்கள். இந்த சிசுக்களுக்கு தாய்பால் இல்லை பசியால் துடித்து அழும்போதெல்லாம், பாலூட்டத்தான் யார் வருவார்? இவர்களோடு உதவும் கரங்களில் உள்ள 600 ஆதரவற்ற பிள்ளைகள், முதியோர் மற்றும் மனநிலை பாதிக்கப் பட்டோரை காப்பாற்ற உங்கள் உதவி அன்றாடம் தேவை. இவர்களை நீங்கள் காப்பாற்ற நினைத்தால்...

**உதவும் கரங்கள்,**
**460, என்.எஸ்.கே. நகர்,**
**அரும்பாக்கம்,**
**சென்னை-106.**
**6216421, 6216521**

(நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு)

## தினத் தந்தி

DAILY THANTHI

### பிறந்து 3 நாள் ஆன குழந்தை குப்பைத் தொட்டியில் கிடந்தது.



சென்னை, செப். 29 — பிறந்து 3 நாட்களே ஆன பச்சிளம் ஆண் குழந்தை கைகள் முறிக்கப்பட்டு குப்பைத் தொட்டியில் அனாதையாக கிடந்தது. இதுபற்றிய விவரம் வருமாறு:-

**குப்பைத் தொட்டியில் பச்சைக் குழந்தை**

சென்னை திருவொற்றியூரில் சுசீலா என்ற பெண் இரவில் வீட்டு வாசல் முன்பு உட்கார்ந்து இருந்தாள். அப்போது வீட்டுக்கு பக்கத்தில் உள்ள குப்பைத் தொட்டியை சுற்றி தெரு நாய்கள் கூட்டமாக சுற்றி வந்து கொண்டிருந்தன.

உடனே சுசீலா அருகில் சென்று பார்த்தபோது குப்பை தொட்டிக்குள் ஒரு துணியில் பச்சிளங்குழந்தை போர்த்தப் பட்டு கிடந்தது. குழந்தையை சுசீலா கையில் தூக்கி எடுத்த போது "வீல்" என்று கத்தியது.

**கை-கால் முறிவு**

குழந்தையின் இடது கை, கால் வீங்கி இருந்தது. இதனால் அந்தக் குழந்தையை சுசீலா சிகிச்சைக்காக அங்குள்ள தனியார் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றாள். அங்கு 'எக்ஸ்ரே' எடுத்து பார்த்தபோது குழந்தையின் இடது கை, கால் ஆகியவற்றை யாரோ வளைத்து முறித்து ஒடித்து உள்ளனர் என்று கண்டு பிடிக்கப்பட்டது.

பிறகு அந்தக் குழந்தையை டாக்டர் பாஸ்கர பாண்டியன் 'உதவும் கரங்கள்' என்ற பொது சேவை மையத்தில் ஒப்படைத்தார். அந்தக் குழந்தை சென்னை மைலாப்பூரில் உள்ள தனியார் ஆஸ்பத்திரியில் 'உதவும் கரங்கள்' நிறுவனம் மூலம் சிகிச்சைக்காக சேர்க்கப்பட்டுள்ளது.

**கொலை முயற்சி**

ஆபத்தான நிலையில் உள்ள அந்த குழந்தைக்கு ஆஸ்பத்திரியில் தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டு




''இந்த சினிமாவிலே மாமியார் - மருமகள், கணவன் - மனைவி சண்டை நிறைய உண்டு போலிருக்கு!''

''எப்படிச் சொல்றே?''

''சண்டைக் காட்சிகளுக்கு பாத்திரங்களைத் தந்துதவிய 'ராஜா வெஸ்ஸல் ஷாப்புக்கு நன்றி'ன்னு டைட்டில்ல காமிக்கிறாங்களே!''

- ஆர். ரகோத்தமன்



''வேறொண்ணுமில்லே, 'தலைவருக்குத் தோள் கொடுக்கத் திரண்டு வாரீர்'ன்னு அடிச்ச போஸ்டர்ல சின்ன தப்பு நடந்து போச்சாம்....!''

- நெய்வேலி ஜீவி

தன. அது கிட்டாதவரையில் இன்னும் பிரமிப்புகள் அதிகமாகியும் இருந்தன. ஒன்றுமில்லை - ஆனால் நிறைய உண்டு.

எங்கள் வேலைத் தளங்களின் மாற்றங்கள் நாங்கள் தினமும் பார்த்துக் கொள்ள முடியாத சூழலை உருவாக்கி விட்டிருந்தது. நாங்கள் பேசி வைத்துக் கொண்டபடி, ஒவ்வொரு சனிக்கிழமை மாலை 5 மணி முதல் ஐந்தரை மணி வரை -அவளுக்கு நேரம் கிடைக்கும் - அப்போது அவள் அலுவலகத்தின் எதிரே உள்ள உணவுச் சாலையில் அமர்ந்து லெமன் டீ சாப்பிட்டுக் கொண்டே பேசுவோம். மற்ற நேரங்களில் நாங்கள் சந்திக்க முடியாது. என் அலுவலகத்தை விட அவள் அலுவலகத்தில் கண்டிப்பும் கவனமும் அதிகம். இப்போது சீசன் டைம் வேறு. கம்போஸிங் வேலைகள் குவிந்த வண்ணம் இருக்கும். வெளியே வரக் கூட நேரம் இருக்காது. முதலாளி மிகவும் கண்டிப்பானவன்.

வாடிக்கையாளர்கள் அங்குள்ள இருக்கைகளில் அமர்ந்து தினசரிகளை மேய்ந்து கொண்டிருந்தனர். அங்கே ஒரு குழந்தை அழகாய்ச் சிரித்துக் கொண்டிருந்தது. நான் இருப்பின்றித் தவித்தேன். நேரம் ஓடிக் கொண்டிருந்தது. ஐந்து மணிக்கு வந்தேன். பத்து நிமிடங்கள் பறந்து போய் விட்டன. இன்னும் என் கையில் இருபது நிமிடங்கள் உள்ளன, இவளுக்காக. அதற்குள் வந்தால் பார்த்துக் கொள்ளலாம். இல்லாவிட்டால் இன்னும் ஒரு வாரம் காத்திருக்க வேண்டும். மீண்டும் ரிசப்ஷனிஸ்ட்டைத் தொந்தரவு செய்யப் பிடிக்கவில்லை. அப்படியே கேட்டாலும், அவன் என் மேல் விழுந்து பிறாண்டினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை - அவ்வளவு கடுகடுப்பாக இருந்தான்.

மணி ஐந்து இருபத்தைந்து ஆனது. கடைசியாக ரிசப்ஷனிஸ்டிடம் ஒருமுறை கேட்டேன். 'சொல்லி விட்டிருக்கிறது, வருவாங்க. உட்காருங்க' என்று அளவாகப் பேசி வெட்டி விட்டான்.

ஐந்து மணி முப்பது நிமிடம். அவள் வரவில்லை. ஐந்து நாற்பதுக்குப் புறப்படத் தயாராகவுள்ள ரயிலைப் பிடிக்க வேண்டும். நான் ரயில் நிலையத்திற்கு ஓடத் தயாரானேன். பாக்கெட்டில் அவளுக்காக வாங்கி வைத்திருந்த மில்க் சாக்லெட் கனத்தது. அதை அங்கிருந்த குழந்தையிடம் கொடுத்தேன். அழகாய் 'தேங்க் யூ' சொல்லி வாங்கிக் கொண்டது. நிமிஷங்கள் என்னைத் துரத்தின. நான் ஓடிக் கொண்டிருந்தேன்.

ஐந்து முப்பத்தைந்துக்கு ஏ.ஸி. சேம்பருக்குள் இருந்து ரேச்சல் வேகமாய் வெளிப்பட்டாள். கண்கள் பரபரக்கத் தேடினாள். ஜெயன் அங்கு இல்லை. குழந்தையின் கையில் மில்க் சாக்லெட் இருந்தது. குழந்தை குதூகலமாய் சாக்லெட் சாப்பிட்டுக் கொண்டிருந்தது - அவன் வந்து சென்றதற்கான அடையாளம்.

"என்ன வாழ்க்கை! அவன் முகத்தைப் பார்ப்பதற்காக இன்னும் ஏழு நாட்கள் காத்திருக்க வேண்டும்."

அவள் கண்கள் லேசாகப் பனித்தன. வேகமாய் மீண்டும் ஏ.ஸி. சேம்பருக்குள் நுழைந்து கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

**செவாலியர் நாயகன் சிவாஜியுடன் அரை டிராயர் வயசிலிருந்தே பழக்க முள்ளவர் காக்கா ராதாகிருஷ்ணன். தமது எழுபதாவது வயதில், நடக்கக்கூட சிரமப்படும் உடல்நலம் சரியில்லாத நிலையில் இந்த மகிழ்ச்சியை எல்லோரைப் போலவும் கொண்டாட இயலவில்லையே என்ற வருத்தத்துடன் வீட்டில் படுத்திருந்தார். அவரைச் சந்தித்து, சிவாஜியுடனான அவரது அனுபவங்களைக் கேட்டோம். பிள்ளை, மருமகள்கள் கைத்தாங்கலாகக் கூட்டி வந்து அமர வைக்க, தம் நினைவுகளை மலர விட்டார் :**

மற்ற எந்த நடிக-நடிகையருக்கும் இல்லாத ஒரு பெருமை எனக்கு உண்டு. எல்லாருக்கும் சிவாஜிகணேசனைத்தான் தெரியும். எனக்கு வெறும் கணேசனைத் தெரியும். சங்கிலியாண்டபுரத்துல ரெண்டு பேரும் பக்கத்து பக்கத்து வீடு. ஒண்ணாவே வளர்ந்தோம். அவங்க கொஞ்சம் வசதியான ஃபேமிலி. எனக்கோ அஞ்சு வயசுலயே அப்பா தவறிப் போய், அந்த வயசுலயே சம்பாதிக்க வேண்டிய நிலைமை. அம்மா என்னை மதுரை நாதகான சபாங்கற நாடகக் கம்பெனில கொண்டு போய் விட்டாங்க. யதார்த்தம் பொன்னுசாமிப் பிள்ளைதான் நிர்வாகி. ட்ருப்புல என்னை மாதிரி நிறைய சின்னப் பசங்க இருந்ததால, விளையாட்டு சந்தோஷத்துல குடும்பத்தைப் பிரிஞ்ச வருத்தம் தெரியலை.

சேர்ந்து ஒரு வாரம் இருக்கும். அம்மாவைப் பார்க்க ஊருக்கு வந்தேன். வந்ததும் வராததுமா கணேசன் வீட்டுக்கு ஓடினேன்.

'டேய், கணேசா! நீயும் வந்துருடா. ரொம்ப ஜாலியா பொழுது போவுது. பிற்காலத்துல பெரிய நடிகனாயிட லாம்'னு ஆசை காட்டினேன். அவனுக்கும் உள்ளூர ஆசைதான் போலிருக்குது. உடனே சரின்னுட்டான். கூட்டிட்டுப் போய் சேர்த்து விட்டேன். அன்னிக்கு ஆரம்பிச்சது, எங்க கலைப் பயணம்...

ஆனா, சேர்ந்ததுலேர்ந்தே அவன் நடிப்பைப் பொறுத்தவரைக்கும் 'வேற ஜாதி'ன்னு தெரிஞ்சிடுச்சி. மேக்-அப் போட்டாச்சன்னா அவன் உடம்புக்குள்ள ஏதோ ஒரு சக்தி வந்து புகுந்துக்கிட்டாப்பலதான்!

பிரமாதமமா பாடுவான். அப்ப நாடகக் கம்பெனில பாடறதுதான் முதல் குவாலிஃபிகேஷன். மைக் எல்லாம் கிடையாது. ஆர்மோனியத்தோட சேர்ந்து உரக்கப் பாடணும். சுருதி பிசகினா செமை உதை விழும்! எனக்கு அவ்வளவா சுருதி சேராது. அடிக்கடி உதைபடுவேன். எனக்கு தெரிஞ்சி அவன் ஒருதரம் கூட அப்ப உதை வாங்கினதில்லை.

அதே மாதிரிதான் மேக்-அப் விஷயமும். அவங்கவங்களே மேக்-அப் போட்டுக்கணும். கணேசன் பிரமாதமா போடுவான். நான் அதிலும் வீக். எனக்கும் அவன்தான் போட்டு விடுவான்.

நாடகக் கம்பெனில இருந்தவரைக்கும் எல்லாப் பசங்களை விடவும் கணேசனுக்குத்தான் நல்ல பேரு. 'கள்வர் தலைவன்'னு ஒரு நாடகம். கள்வர் கும்பல்ல ஒருத்தனா வருவான். டான்ஸ் ஆடணும். ஒரு சீன்ல வந்தாலும், அத்தனை பேரையும் தூக்கிச் சாப்ட்டுட்டுப் போயிடுவான். கணேசனை மாதிரி நம்மால பேர் வாங்க முடியலையேன்னு வருத்தமா இருக்

“எல்லோருக்கும் சி
எனக்கு கணே

கும்... இவன் சீக்கிரம் சினிமாவுக்குப் போயிடுவான்னு நினைச்சேன்.

ஆனா அதிலும் நான் முந்திக்கிட்டேன். 1940, 41, 42 வருஷம் சரியா ஞாபகமில்லை - கலைவாணர், 'சந்திஹரி'ன்னு ஒரு படம் எடுத்தார். அரிச்சந்திரன் கதையோட உல்ட்டா. அதுல கணேசன்தான் அரிச்சந்திரனோட பையன் வேஷத்துக்கு முதல்ல தேர்வானா ஆனா, "பையன் கொஞ்சம் 'வளத்தியா' இருக்கானே. சின்னப் பையனா வேணும்"னு கலைவாணர் என்னை செலக்ட் பண்ணிட்டார்.

எனக்குப் பின்னாலதான் கணேசன் சினிமாவுக்கு வந்தானாலும் குறுகிய காலத்துல எல்லாரையும் ஓவர்-டேக் பண்ணிட்டான்.

ஆனா அன்னிக்கு நாடகக் கம்பெனில பார்த்த கணேசனுக்கு நேத்து உடம்பு சரியில்லா



• 'காக்கா' ராதாகிருஷ்ணனுடன் சிவாஜி: மலரும் நினைவுகள்!



## ஜியைத்தான் தெரியும்; னைத் தெரியும்!”

படுத்திருந்த என்னை வந்து பார்த்த சிவாஜிக்கும் எனக்கு வித்தியாசமே தெரியலை. பழைய நட்பு, பாசம்... அவன் மாறவேயில்லை.

“ரொம்ப நாள் இடைவெளிக்கப்புறம் தேவர் மகன்ல நாங்க இணைஞ்சி நடிச்சது எனக்கு ரொம்ப சந்தோஷமான விஷயம். ஷூட்டிங்ல சிவாஜி, நான் நடிக்கறப்போ என்னையே முறைச்சி பார்த்துட்டிருப்பான். எனக்கோ, 'இவன் பாக்கறானே, பாக்கறானே'ங்கற நினைப்புலயே நடிக்க கஷ்டமா இருக்கும்.

ஏன்னா, என்னதான் பால்ய சினேகிதன்னாலும் இன்னிக்கு உலகம் முழுக்க பேசப்படற ஒரு நடிகன். நடிப்புங்கற கலைக்கு உயிர் கொடுத்தவன். எத்தனையோ கலைஞர்களுக்குத் துரோணர்... இவன் எப்ப 'செட்'டை விட்டு வெளிய போவான், உறுத்தல் இல்லாம நடிக்கலாம்னு தவிப்பேன்.

ஆனா ஷூட்டிங்னு வந்துட்டா, முடியற வரைக்கும் இடத்தை விட்டு எழுந்துக்க மாட்டான். தன் வேலை முடிஞ்சதுன்னு போற டைப் இல்லை. எல்லார் நடிப்பையும் கூர்ந்து கவனிப்பான். அட்வைஸ் பண்ணுவான்.

தேவர் மகன்ல சிவாஜி என்கிட்ட சொன்னது ஒரே விஷயம்தான். 'டேய், ராதா! இது ரொம்ப பிரமாதமான கேரக்டர், அழுத்தமான கேரக்டர்!' அவ்வளவுதான்.

இதுக்கு என்ன அர்த்தம்? 'நல்லா நடி' என்றா? 'சொதப்பிடாதடா' என்றா? எனக்கு படம் முடியற வரைக்கும் டென்ஷன் தீரவேயில்லை...

உலகம் முழுக்க இன்னிக்கு கணேசனைப் பாராட்டறாங்க. விருது கொடுக்கறாங்க. சின்ன வயசுலேர்ந்து பழக்கம். இது வரைக்கும் நான் என்ன குடுத்திருக்கேன் அவனுக்கு? பணமோ, புகழோ தர நான் வேண்டியதில்லை. அவனுக்கும் அது இனிமேலும் தேவையில்லை.

எனக்கு மட்டும் இளமையிருந்தா அதுல கொஞ்சம் அவனுக்குக் கொடுத்திருப்பேன். எனக்கு வயசிருந்தாலும் இனிமே சாதிக்க ஒண்ணுமில்லை. ஆனா கணேசனுக்கு இன்னும் இளமை இருந்தா புதுசு புதுசா ஏதாவது செய்வான். என்னோட ஆயுளை அவனுக்குத் தர எனக்கு வழியில்லையேன்னுதான் வருத்தமா இருக்கு! ஆனா மனப்பூர்வமா வாழ்த்த முடியுமே, அதைச் செய்கிறேன்.

சந்திப்பு : **கிச்சா**

வண்ணப்படங்கள் : **யோகா**

# தடையில்லா மருத்துவ பாதுகாப்பு மற்றும் வருடாந்திர வருவாய்...

...உங்களுக்கு மற்றும் உங்கள் வாழ்க்கை துணைவருக்கு.



# SENIOR CITIZENS' UNIT PLAN

முதியோர்களுக்கு யூடிஐயின் காணிக்கை

## சிறப்பம்சங்கள்

- **ஒப்பற்ற திட்டம்**
  ஒரு முறை மட்டும் செய்யும் முதலீடு உங்களுக்கும் உங்களுடைய உற்ற துணைவருக்கும் 58 வயதிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது ரூ. 5 இலட்சம் வரையிலான மருத்துவமனை செலவுகளுக்கு
- **யார் முதலீடு செய்ய முடியும்**
  18லிருந்து 54 வரையிலுள்ள வயது தொகுப்பில் இருக்கும் எந்த ஒரு தனிநபரும் சேர முடியும். 55-59 வரை வயதானவர்களுக்கு திட்டம் 31 மே 1995 வரை நடப்பில் இருக்கும். நிறுவனங்கள்கூட தங்கள் ஊழியர்களுக்காக இத்திட்டத்தில் முதலீடு செய்ய முடியும்.
- **எப்போது, எவ்வளவு முதலீடு செய்ய வேண்டும்.**

| உங்கள் வயது | ரூ. | உங்கள் வயது | ரூ. |
|---|---|---|---|
| 18 | 2500 | 40 | 9800 |
| 25 | 2800 | 45 | 15300 |
| 30 | 4200 | 50 | 24500 |
| 35 | 6300 | 54 | 35000 |

- **இத்திட்டம் எவ்வாறு வேலை செய்கிறது.**
  மிகவும் எளிதாக! உங்கள் சீனியர் சிட்டிசன்ஸ் அடையாள அட்டையை மருத்துவமனைகளில் காட்டுங்கள். சிகிச்சை பெற்ற பிறகு கையொப்பமிட்டு வெளியேறுங்கள். மற்றதை நாங்கள் கவனித்துக் கொள்வோம்.
- **120க்கும் மேலாக தேர்ந்தெடுத்த மருத்துவமனைகளுடன் தொடர்பு கொண்டுள்ளோம்.**
  வருங்காலத்தில் மேலும் பல மருத்துவமனைகள் இத்திட்டத்தில் சேர்க்கப்படும்.
- **வருடாந்தர வருவாய்**
  55 வயதுக்கு முன் சேருபவர்களுக்கு 58 வயதிலிருந்து வருடாந்தர வருவாய் கிட்டும்.
- **உரிமைக் கோரிக்கை இல்லையேல் போனஸ்**
  உரிமைக் கோரிக்கை செய்யாத ஒவ்வொரு ஆண்டுக்கும் 5% (அதிகபட்சம் 10 ஆண்டுகளுக்கு)
- **தீர்வு பெறாத தொகையை எடுத்துக்கொள்ளும் வசதி.**
  61-ஆம் வயதில் கிடைக்கும் மருத்துவ நற்பயன்களை இழக்காமல்
- **முன்பிலிருந்தே இருக்கும் நோய்களுக்கும் இப்பாதுகாப்பு உண்டு.**

### சிடிபாங்க் கார்ட் அங்கத்தினர்கள்

நீங்கள் இத்திட்டத்திற்காக உங்கள் சிடிபாங்க் கார்ட் மூலம் இப்போது பணம் செலுத்த முடியும்

அதிகப்படியான விவரங்களுக்கு சிடிபோன் பாங்கிங்கை தொடர்பு கொள்ளவும்.

"I HAVE TEN COMMANDMENTS
FOR MY FILMS :
THE FIRST NINE ARE.
THOU SHALL NOT BORE"

*- BILLY WILDER.*

நாகேஷ் இதே கோட்பாட்டைத்தான் வேறுவிதமாக அடிக்கடி நினைவுபடுத்திக் கொள்வார். ஒரு வார்த்தை கூட அதிகமாக இருக்கக் கூடாது; ஒவ்வொரு வார்த்தையி லும் ஒரு 'Punch' இருக்க வேண்டுமென்று வசனங்களை மீண்டும் மீண்டும் சொல்லிப் பார்த்துக் கொள்வார். உதாரணமாக ஒரு ஷாட்டில் எதிரே வருபவரைப் பார்த்து 'ஹலோ' என்று சொல்ல வேண்டுமென்று வைத்துக் கொள்வோம். நாகேஷிடம் இது தான் ஷாட் என்று சொன்னால் வெறும் 'ஹலோ' மட்டும் சொல்லி விட்டுப் போக அவரால் முடியாது. அங்கு எப்படி 'ஷாட்' வைக்கப்பட்டிருக்கிறது என்பதை நன்றாகக் கூர்ந்து கவனித்துப் பார்த்துக் கொள்வார். நாம் எதிர்பார்க்காமல் ஏதாவது ஒரு சின்ன Action ஐ செய்து விட்டு 'ஹலோ' என்று சொல்லி விட்டுப் போவார். கைகுலுக்குவது போல் வலது கையை நீட்டிக் கொண்டே 'ஹலோ' என்று இவர் சொல்லி நெருங்க, எதிரில் வருபவரும் கையை நீட்ட.... கை கொடுப்பதற்கு முன் சட்டென்று நீட்டிய கையை பின்னால் இழுத்துக் கொண்டு

# 12 நினைவலைகள்

போய் விடுவார். ஒரு சின்ன improvement தான், ஆனாலும் செட்டிலிருப்பவர்கள் 'கொல்'லென்று சிரித்து விடுவார்கள். சில நேரங்களில் ஒத்திகையின் போது எதையுமே செய்யாமல் 'Take' எடுக்கும் போது மட்டும் செய்ய எதிரில் வந்து கொண்டிருக்கும் நண்பர் சிரிப்பை அடக்க முடியாமல் சிரித்து விடுவார். இன்னொரு 'Take' எடுக்க வேண் டியிருக்கும். ஒரு 'ஷாட்'தானே என்று விட்டு விடாமல், அந்த ஒரு ஷாட்டே ஒரு முழு திரைப்படம் என்கிற நினைப்பில் வெகு அக்கறையுடன் பணிபுரியும் சாமர்த்தியம், தனித்தன்மை நாகேஷுக்கு மட்டுமே உண்டு.

காற்றுக்கென்ன வேலி!
கடலுக்கென்ன மூடி!
கங்கை வெள்ளம் சங்குக்குள்ளே
அடங்கி விடாது" என்று என் திரைப் படத்திற்காகக் கண்ணதாசன் எழுதியிருந் தார். அதே போலத்தான் நாகேஷை ஒரு அத்தியாயத்தில் மட்டும் அடக்கி விட முடி யாது; தொடர்கிறேன்.

'சர்வர் சுந்தரம்' நாடகத்தைத் திரைப் படமாகத் தயாரிக்க முற்பட்ட போது பல ரும் பலவிதமாகப் பேசினார்கள். இமயமாக உயர்ந்து நிற்கும் இரண்டு நட்சத்திர நடிகர் கள் திரையுலகத் தூண்களாக நிற்கும் போது, நாகேஷை எப்படிக் கதாநாயகனாக மக்கள் ஒப்புக் கொள்வார்கள் என்று பரவலாகப் பேசப்பட்டு, எல்லோருமே அந்தப் படத்தின் தோல்வியை மிக ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த நேரத்தில், இந்த நாடகத்தை நிச்சயமாக வெற்றிப் படமாக்கி விட முடியும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு, மற்ற திரைப்படப் பிரமுகர்களின் எதிர் பார்ப்பையெல்லாம் பொய்யாக்கிய பெருமை ஏவி.எம். அவர்களையும் டைரக் டர்கள் கிருஷ்ணன் பஞ்சு அவர்களையுமே சேரும். 'சர்வர் சுந்தரம்' திரைப்படமாகவும் வெற்றி பெற்று நூறு நாட்கள் ஓடி சரித்திரம் படைத்ததென்றால், அதே படம் தெலுங்கி லும் மொழிமாற்றம் செய்யப்பட்டு, ஆந்திரா வில் வெளியிடப்பட்ட போது, அங்கும் வெற்றிக் கொடி நாட்டி Dubbing பட வர லாற்றிலே ஒரு தனி இடம் பெற்றது. பிரபல ஹிந்தி காமெடியன் மெஹ்மூத், சர்வர் சுந்தரம் தமிழ்ப் படத்தைப் பார்த்து விட்டு "நாகேஷ் உங்களுக்கு மட்டும் சொந்தமான நடிகர் அல்ல; இந்தியாவிற்கே சொந்தமான வர்; அவரைப் போல் நடிப்பதற்கு வட இந்தி யாவில் எந்த நடிகரும் கிடையாது" என்று மனம் விட்டுப் பேசியது இன்னமும் என் நினைவை விட்டு அகலவேயில்லை. இந்தி யில் தயாரிக்கப்பட்ட சர்வர் சுந்தரம் படத் தில் நாகேஷ் நடித்த வேடத்தில் மெஹ்மூத் அவர்கள்தான் நடித்திருந்தார்.

நாகேஷுடன் பணிபுரிவதே ஒரு சுக மான அனுபவம். அவர் துண்டு துண்டாகக் கூறும் அற்புதமான யோசனைகளை சரி யான இடத்தில் பொருத்தி திரைப்படமாக்கி னால் அந்தக் காட்சி நிச்சயம் ரசிகர்களின் கவனத்தை பெரிதாகக் கவரும். என்னிடம் பேசிக் கொண்டிருக்கும் போது ஒருமுறை



சுவரில் ஏறி Ceiling ல் தலைகீழாக நடந்து இந்தப் பக்கத்து சுவரின் வழியாக இறங்கி வருவது போல் ஏதாவது ஒரு இடத்தில் செய்ய வேண்டும் என்கிற ஒரு எண்ணத்தைத் தெரிவித்திருந்தார். அதைத்தான் நான் பாமா விஜயம் திரைப்படத்தில் ஒரு பாடல் காட்சியில் புகுத்தியிருந்தேன். தனது மனைவிக்குப் பயந்து சுவரில் ஏறி ஓடுகின்ற அந்தக் காட்சி பெரிதும் வரவேற்கப்பட்டது.

சர்வர் சுந்தரம் திரைப்படத்தின் 100வது நாள் விழா ஏவி.எம். ஸ்டுடியோவில் நடைபெற்றது. எங்கள் 'ராகினி ரெக்ரியேஷன்ஸ்' நாடகக் குழுவிற்கென்று தனியாக ஒரு பாராட்டுக் கேடயத்தை வழங்கினார்கள். விழா முடிந்து, நாகேஷ் தமது காரை வீட்டிற்கு அனுப்பி விட்டார். நாடகக் குழு சம்பந்தப்பட்டவர்களும், இந்தப் படத்தில் சம்பந்தப்பட்ட மற்ற நடிகர்







களும், நான், நாகேஷ், மேஜர் சுந்தரராஜன், எல்லோரும் கையில் 100வது நாள் கேடயத்துடன் வடபழனியிலிருந்து மைலாப்பூர் வரை அரட்டை அடித்துக் கொண்டு நடந்தே வந்தது நெஞ்சிலே இன்னமும் பசுமையாக இருக்கிறது.

**எ**திர்நீச்சல் நாடகத்தில் ஒரு காட்சி. எப்பொழுதும் செய்தித்தாள்களைப் படித்துக் கொண்டேயிருக்கும் ஒரு கதாபாத்திரம், நாகேஷிடம் "பாத்தியா மாது! 1980க்குள்ளே ரஷ்யா ராக்கெட் விட்டு சந்திரமண்டலத்துக்குப் போகப் போகுதாம். நாமும் இருக்கமே! இந்தியா என்ன செய்யப் போகுது" என்று கேட்பார். அதற்கு நாகேஷ் "இந்தியா ரஷ்யாவுக்குப் போயிடும்" என்பார். கைத்தட்டல் அடங்க இரண்டு நிமிடங்கள் பிடிக்கும்.

நான் எழுதிய வசனத்தை சற்று அழகாக, சுருக்கமாக மாற்றி அமைத்தவர் நாகேஷ்தான். நகைச்சுவை வசனங்கள் பேசப்படும் போது, அவை சுருக்கமாகவும் நறுக்கென்றும் இருந்தால் தான் அந்த வசனம் மிகப் பெரிய வரவேற்பைப் பெறும் என்பதை அனுபவபூர்வமாகத் தெரிந்து வைத்திருப்பவர் நாகேஷ். இதே வசனம் எதிர்நீச்சல் திரைப்படத்திலும் இருந்தது. ஆனால் சென்ஸாரின் கத்தரிக்கோலுக்கு இரையானது.

காரணம் : ஒரு நட்பு நாட்டை அநாவசியமாகக் குறிப்பிடுவதையோ அல்லது கேலி செய்வதையோ சென்ஸாரின் சட்டதிட்டங்கள் அனுமதிப்பதில்லையென்று விளக்கம் கூறப்பட்டது. மிகப் பெரும் கைத்தட்டலைப் பெற்ற இந்த நாடக வசனம் ஹாஸ்யத்திற்காகவே சொல்லப்பட்டிருக்கிறதென்றும், யாரையும் புண்படுத்தும் நோக்கமேயில்லையென்றும் நான் எவ்வளவோ விளக்கிக் கூறியும் 'சென்ஸார்'காரர்கள் ஒப்புக் கொள்ளவில்லை.

**எ**ன்னை நாகேஷும், அவரை நானும் இயக்கியிருக்கிறோம். நாங்கள் இருவரும் இணைந்து பணிபுரிந்த பல படங்கள் பெரும்

**கே. பாலசந்தர்**

வெற்றி பெற்றிருக்கின்றன. பாலசந்தர் படத்தில்தான் நாகேஷ் திறமையாக, அக்கறையுடன் நடிக்கிறார் என்றெல்லாம் பேசப்பட்டது. யார் கண் பட்டதோ?

அடுக்கடுக்காகத் தொடர்ந்து எனது படங்களில் நடித்துக் கொண்டிருந்த நாகேஷிற்கும் எனக்குமிடையே ஓர் இடைவெளி ஏற்பட்டது. அந்த நீண்ட இடைவெளியில் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்ததில் நஷ்டம் இருவருக்கும்தான்.

நாகேஷைப் பொறுத்தவரை அவருக்கு எதிரிகளே கிடையாது! அவரது நாக்குதான் அவருக்கே சில நேரங்களில் எதிரியாக அமையும். எதிர்பாராத விதமாக நடந்த அந்தச் சம்பவத்தைக் காலம் ஜீரணித்துக் கொண்டதோடு, அதே காலம் எங்கள் இருவரையும் திரும்பவும் 'அபூர்வ ராகங்கள்' படத்தில் இணைத்தும் வைத்தது.

ஓர் அருமையான டாக்டர் குணசித்திரத்தில் அபூர்வ ராகங்களில் நாகேஷ் நடித்திருந்ததை யாரால் மறக்க முடியும்?

நாகேஷிற்கும் எனக்கும் இடைவெளி ஏற்பட்ட முதல் வாரமென்று நினைக்கிறேன். அப்பொழுதுதான் எனக்கு 'ஹார்ட் அட்டாக்' வந்தது.

அப்போது என் மனைவி சொன்னாள்.

"நாகேஷும் நீங்களும் எவ்வளவோ நெருக்கமாக இருந்தீர்கள்; அவரது தோழமைப் பிரிவை உங்களால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அதனால்தான் உங்களுக்கு திடீரென்று இந்த நோய் வந்தது" என்று சொன்னாள்.

நெருக்கமாக உறவாடிய உள்ளங்கள் திடீரென்று விலக நேர்ந்தால் இப்படித்தான் ஏதாவதொன்று நிகழுமோ?

**ந**டிக நடிகையர் 100, 200 படங்கள் என்று தாங்கள் நடித்து முடித்த படங்களின் எண்ணிக்கைக்கேற்ப விழா நடத்துகின்றனர். ஆனால் நாகேஷ் எந்த விழாவும் எடுத்ததில்லை. எத்தனை படங்களில் நீங்கள் நடித்திருக்கிறீர்கள் என்று கேட்டால்... 500 என்று பத்து ஆண்டுகளுக்கு முன்பே சொல்வார். இன்றைக்குக் கணக்கெடுத்துப் பார்த்தால் ஆயிரம் படங்களைத் தாண்டியிருப்பார் என்று நினைக்கிறேன். எவ்வளவு படங்கள்! எத்தனை வகைப்பட்ட குணசித்திரங்கள், கதாபாத்திரங்கள்! இன்றைக்கும் அவர் களைப்படையவில்லை! மேலும் மேலும் ஏதாவது புதுமையாகச் செய்ய வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருக்கும் நாகேஷ் - இன்னும் சொன்னால் அதே வெறியுடன் துடித்துக் கொண்டிருக்கும் அவரது இளமை மாறாத உள்ளத்திற்கு ஈடுஇணை கிடையாது.

கிட்டத்தட்ட ஆயிரம் திரைப்படங்களில் நடித்து முடித்த ஒரு நடிகன் ஒரு திரைப் படத்திலே வெறும் பிணமாக மட்டும் நடிப்பதற்கு ஒப்புக் கொள்வாரா என்று நினைத்துப் பார்ப்போம். 'மகளிர் மட்டும்' திரைப் படத்தில் நாகேஷ் அப்படித் தோன்றியிருக்கிறார். அது நாகேஷால் மட்டுமே முடியும். அந்தப் படத்தை நான் பார்த்து விட்டு கமலிடம் சொன்னேன் : "வேறு யாரை அந்தப் பாத்திரத்தில் போட்டிருந்தாலும் அவர் பிணமாக நடிக்க முயற்சி செய்திருப்பார். "But Nagesh lived the role of a dead body" என்று சொன்னேன்.

கமல் சொன்னார் : "It needs a Nagesh to do it."

(தொடரும்)

படங்கள் உதவி :
**பிலிம் நியூஸ் ஆனந்தன்**

---

## ஆட்டிய ஆலே!



கல்வாய்ப் பிறந்திருந்தால் கலைவடிவம் பெற்றிருப்பாய்!
புல்வாய்ப் பிறந்திருந்தால் பூமித்தாய் குளிர்ந்திருப்பாள்!
சொல்வாய்ப் பிறந்திருந்தால் தூயகவி சொத்தாவாய்!
தொல்லை பலகொடுக்கத் தோன்றிவிட்டாய் மானிடனாய்!

எதுவாழ்க்கை உயர்வாழ்க்கை என்றே புரியவில்லை!
புதிர்வாழ்க்கை வாழ்ந்துவிட்டுப் புதுவாழ்க்கை என்கின்றாய்!
மதிவாழ்க்கை இன்றி மனவீட்டைப் பூட்டிவிட்டுக்
கதிவேண்டும் என்றே கதறுகின்றாய் மானிடனே!

- முத்துவேங்கடேசன்

## போட்டிக் கதை - 8

**கமலா கந்தசாமி**

'சுடர்மணி சலவை நிலையம்.'

- வாசலில் அழுக்கடைந்த பழைய தகர போர்டு. மிகப் பழங்காலத்து மேஜை. அதன் மீது அடுக்கி விரிக்கப்பட்ட பழைய போர்வைகள். மேஜை ஓரத்தில் ஒரு இரும்பு வளையம். அதன் மீது கரி கொட்டி பற்றவைக்கப்பட்டு 'சூடு' வரக் காத்திருக்கும் இஸ்திரி பெட்டி. அருகில் வடிவேலு.

கட்டம் போட்ட முழுக்கால் சட்டை, முழுக்கை சட்டை சகிதம் கம்பீரமாய் நடந்து வரும் மகனைப் பார்த்து மனம் பூரித்தான் வடிவேலு.

"வாங்க தம்பீ..."

'பெரிய படிப்புப் படிச்சி... கைக்கு ஒசந்த புள்ளையை வா.. போன்னு பேசறது மரியாதை இல்லே' என்று மனதிற்குள் நினைத்துக் கொள்ளும் வடிவேலு, சென்ற வருடம் கல்லூரிப் படிப்பைப் பாதியில் முடித்து விட்டு, பரீட்சை எழுதாமலே... சதா அரசியல்... கட்சிக் கூட்டம் என்று அலையும் மகனைக் கூட பெருமையுடன் நினைத்து 'வாங்க தம்பி' என்றும்... மனைவி காத்தாயியிடம் கூட 'பெரிய தம்பி சாப்பிட்டுப் போயிட்டாங்களா...' என்றும்தான் கேட்பது வழக்கம்.

"அவசரமா பத்து ரூபா இருந்தாக் கொடு..." கடையின் வாசலில் நின்று, உள்ளே வந்தால் கூட அது 'கேவலம்' என்பது போன்ற உணர்வில் தமிழ்மணி உத்தரவு போல சப்தமாய்க் கேட்டான்.

"இதோ..." ஓடிப் போய் கல்லாப் பெட்டி திறந்து அதன் உள்ளே இருந்த நோட்டுகளில் அழுக்குப் படாத... கசங்காத... நல்ல நோட்டாக ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து பவ்யமாய் நீட்டினான்.

பணம் எதற்கு என்று கூறாமலும், 'வரட்டுமா' என்று மரியாதைக்குக் கூட கேட்காமலும் தமிழ்மணி சென்றாலும் அது பற்றி மனதில் எந்த சஞ்சலமும் இல்லாது... மடிப்புக் கலையாத சட்டையில் மகன் நடக்கும் அழகில் மயங்கிய வடிவேலு, "தம்பி..." மெல்ல கூப்பிட்டான்.

'என்ன' என்பது போல் திரும்பினான் தமிழ்மணி.

"வேலை விசயமா... நம்ம எம்.எல்.ஏவைப் பாத்திங்களா..."

பதினொரு மணி காலைக் காட்சியில் ஓடும் மலையாளப் படத்துக்கு நேரமாகி விட்ட அவசரத்தில் வேகமாய் நடக்க ஆரம்பித்த தமிழ்மணி, "வீட்ல வந்து சொல்றேன்" என்று அலட்சியமாய்ப் பதில் சொல்லி விட்டு வேகமாய் தியேட்டரை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

காலையில் குளித்து, அப்பா ஆசையாய்ப் 'பொட்டி' போட்டு வைத்த பேண்ட்-சட்டை மாட்டி, கான்வென்ட் ஸ்கூல் வரைக்கும் போகிற பெண்கள் பின்னால் ஜொள்ளு வழிய நடந்து, மலையாளப் படம் காலைக் காட்சி பார்த்து, மதியம் சாப்பிட்டு ஒரு குட்டித் தூக்கம் போட்டு, சாயந்திரம் நாலு மணிக்கு அவசரமாய் முகம் அலம்பி, வேறு சலவைச் சட்டை மாற்றி, நாலு பத்துக்கு எல்லாம் கான்வென்ட் வாசலில் ஆஜர் ஆகி... பின் தன் கட்சி ஆபீஸ் வந்து விடுவான். இரவு பத்து மணி வரையில் 'இளைஞர் அணி' அலுவலகம்தான் கதி. வரப் போகும் கண்டனக் கூட்டம், சைக்கிள் பேரணி, சென்னைப் பேரணி, இடைத்தேர்தல் பிரசாரம்... என்று கட்சிப் பணி டிஸ்கஷன்... இடையிடையே கூட்டம்... அதில் 'இளைஞர் அணி துணைச் செயலர்' என்ற



# அழுக்கு

பதவியோடு மேடை ஏறிக் கொஞ்சம் காட்டமான பேச்சு..

'தம்பி... கொன்னுட்டே' என்று முதுகில் தட்டி, எம்.எல்.ஏ., வட்டச் செயலர் பாராட்டுக் கிடைக்கும் போது... சொர்க்கமே கையில் வந்தது போல் மகிழ்வான் தமிழ்மணி.

**ப**டம் முடிந்த போது வயிறு பசித்தது. வீட்டின் உள் நுழைந்ததுமே, கருவாட்டுக் குழம்பு வாசனை மூக்கைத் துளைத்தது.

"என்னம்மா சாப்பாடு ரெடியா?" கேட்டான் தமிழ்மணி.

"தம்பி.. அவசரமாய் கேரியரில் சாப்பாடு தர்றேன். அப்பாவுக்குக் கடையில் கொண்டு போய் கொடுத்துட்டு வந்துர்றியா? அவுக... காலையில சாப்பிடாம போயிட்டாக.." என்றாள் அவன் அம்மா காத்தாயி.

"போம்மா... உனக்கு வேற வேலை இல்லே. எனக்கு சாப்பாடு எடுத்து வச்சிட்டு, நீயே போயிட்டு வந்துடு..." என்றபடி கையில் தட்டை எடுத்துக் கொண்டு வந்து சமையல் அறையில் உட்கார்ந்தான்.

"வெய்யில்டா... காலுக்கு செருப்புக் கூட இல்லே..."

"என்னால முடியாது.. லாண்டரிக் கடைக்குப் போறது வெக்கமா இருக்கு..." முகம் சுழித்தான் தமிழ்மணி.

"ஏய்... அவரு சம்பாதிச்சதில சமைச் சதைச் சாப்பிட மட்டும் வெக்கமா இல்லையா உனக்கு? அவர் அழுக்கு மூட்டை சுமந்து... ஆத்துல முதுகு ஒடிய துவைச்சி.. அனல் நெருப்புல வெந்து பொட்டி போட்டுச் சம்பாதிக்கிற காசில தண்டச்சோறு சாப்பிட்டு ஊர் சுத்திறியே... அது வெக்கமா இல்லே.."

பல நாள் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து, மகன் மீது இருந்த கோபத்தில் வெடித்தாள் காத்தாயி.

"இந்தா கெழவி.. என்னா வாய் நீளுது.. புட்டுப் புடுவேன் மோரையை..." என்று தட்டைத் தூக்கி அம்மா மீது வீசினான்.



தட்டின் நுனி மூக்கில் வெட்டி. லேசாய் ரத்தம் கசிந்தது. தட்டு சுவரில் மோதி நெளிந்தது. அது பற்றி கொஞ்சமும் கவலைப்படாது வேறு தட்டு எடுத்துத் தானே போட்டுச் சாப்பிட்டு விட்டுப் படுத்துத் தூங்கியும் போனான் தமிழ்மணி.

'ச்சே... நமக்குப் போய் இப்படி ஒரு புள்ளையா? என்ன பாவம் செய்தேன் மாரியாத்தா...? மனதிற்குள் முணுமுணுத்துக் கொண்டு, கொஞ்சமாய் மகன் மீதம் வைத்திருந்த சாதத்தை எடுத்துக் கொண்டு கடைக்குச் சென்றாள் காத்தாயி.

புதிதாய் சாலையில் போட்ட கப்பிக் கல் முள்ளாய் காலில் குத்த, வெய்யிலில் உருகிய தார், காலில் ஒட்ட நடந்தாள்.

வேர்த்துக் களைத்து வரும் மனைவியைப் பார்த்து, "என்ன ராக்கு... மூக்கில ரத்தம்?" என்று வடிவேலு பதறிக் கேட்டான்.

"எல்லாம் உங்க புள்ளையாண்டான் செய்ததுதான்" என்றாள் ராக்காயி.

"நீ.. ஏதும் புள்ளேகிட்டே எக்குத்தப்பா பேசியிருப்பே..." வடிவேலு மனைவி மீது கோபப்பட....

"உங்களால் தாங்க... அவன் இப்படிக் கெட்டுப் போறான். படிப்பையும் பாதியில விட்டுட்டான். கடையில வந்து பொட்டி போட்டாலும் நாலு காசு இடைக்கும்... கண்டபடி ஊர் சுத்தறான்..." என்றாள் ராக்காயி.

"என்னடி புரியாம பேசறே. காலேஜ்ல படிச்ச புள்ளே.. அவன் ஏண்டி இந்த அழுக்கைத் தொடணும். நம்ம தலையெழுத்து நம் மோட தொலையட்டும். ஏதாவது கவர்மெண்டு வேலைக்குப் போகணும்டி..."

"சரி... நல்லதுதான். அதுக்கு இப்படி கட்சி... அரசியல்... கூட்டம்னு சதா சுத்த றானே... வேலை தானா கெடைச்சிடுமா?"

"சும்மா இரு புள்ளே... நம்ம எம்.எல்.ஏக்கு தம்பி மேல உசிரு. மந்திரிகிட்டே சொல்லி வேலை வாங்கித் தந்துடறேன்னு சொல்லியிருக்காரு.. சீக்கிரம் கெடச்சிடும். இன்னைக்குக் கூட தம்பிகிட்டே சொல்லி எம்.எல்.ஏவைக் கேட்கச் சொல்லியிருக்கேன்..."

"என்னமோ போங்க... நீங்களும்.. உங்க புள்ளையும்..." என்று அந்தப் பேச்சிற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தாள் ராக்காயி. வடிவேலு சாப்பிட்டு முடித்ததும், பாத்திரம் எடுத்துக் கொண்டு திரும்பினாள்.

குட்டித் தூக்கம் முடிந்து.. எழுந்த தமிழ்மணி, டிரஸ் மாற்றி அவசரமாய் காம்வெண்ட் வாசலுக்கு வந்தான். பக்கத்து மெக்கானிக் ஷெட்டில் தனது புல்லட் மோட்டார் சைக்கிளை ரிப்பேருக்கு கொடுத்து விட்டு எம்.எல்.ஏ. நின்றார்.

"வணக்கம் அண்ணே..." என்றான் தமிழ்மணி.

"என்னப்பா... எப்படி இருக்கே?" தோழமையுடன் தோளில் கை போட்டார் எம்.எல்.ஏ.

"நல்லா இருக்கேன் அண்ணே..." நெளிந்தான். தோளில் கை போட்டு எப்படி இருக்கே... என்று கேட்டதிலேயே புளகாங்கிதம் அடைந்தான்.

"அண்ணே... வேலை விஷயமாய்..." மெல்ல தமிழ்மணி ஆரம்பிக்க...

"என்னடா பெரிய வேலை? மந்திரியே நாற்பது ஐம்பதுன்னு கேட்கிறார்... அதுவும்.. அவர் மச்சினி மகனுக்கு நான் சொல்லி வச்சிருந்த வேலையைப் போட்டுட்டாராம். அதனால் என்ன... வேலைக்குப் போயிட்டா உன்னை மாதிரி கட்சிக்கு ஆளுங்க யாருடா கிடைப்பாங்க...? வேறு ஒரு நல்ல ஐடியா



# படிக்கிற வயசில

காமெடி இல்லாத பாண்டியராஜன் படம். விறுவிறுப்பான சண்டைக் காட்சிகளிலும், நெஞ்சைத் தொடும் வசனங்களிலும் முயற்சி பளிச்சிடுகிறது.

படிக்கிற வயதில் வேறு சேஷ்டைகள்

இருக்கு. சாயந்திரம் ஆபீசுக்கு அவசியம் வா..." என்ற எம்.எல்.ஏ. அதற்குள் பைக் சரியாகி விடவே அதில் ஏறி அமர்ந்து கம்பீரமாய் சப்தமிட வண்டியைக் கிளப்பினார்.

மாலை ஊரைச் சுற்றியவனுக்கு, எம்.எல்.ஏ. பார்க்கச் சொன்னது நினைவிற்கு வந்ததும், கட்சி ஆபீஸ் சென்றான்.

கண்கள் சிவக்க, சிகரெட் புகைத்து... கோபமாய் யோசனையுடன் இருந்த எம்.எல்.ஏ., தமிழ்மணியைப் பார்த்ததும், "தமிழ்மணியா? வா... வா" என்று ஏக அமர்க்களமாய் வரவேற்றார்.

"உட்கார் தமிழ்மணி..."

தயங்கித் தயங்கி எதிரே உட்கார்ந்தான். 'ஏதோ வேலைக்கு வாய்ப்புச் சொல்லப் போகிறார்' என்ற நம்பிக்கையுடன் காத்திருந்தான்.

"நீ என்ன செய்றே.. நம்ம பசங்க எல்லாரையும் ராத்திரிக்கே ஒன்னு சேர்க்கிறே... நம்ம கட்சியில் இருந்து பிரிஞ்சவனுங்க ஊர்வலம் போறானுக. அதைத் தடுக்கணும்..." என்ற எம்.எல்.ஏ. அந்த வன்முறைக்குப் புதிய திட்டம் வகுத்தார். அதனை விளக்கினார்.

தமிழ்மணிக்கு ஏமாற்றமாய் இருந்தது. வேலையை எதிர்பார்த்தவனுக்கு.. காலியாய் இருப்பதாகச் சொன்ன வேலை மந்திரியின் உறவினர்க்குப் போக... இப்போது அடியாள் வேலைக்கு அழைக்கும் எம்.எல்.ஏ. மீது லேசாய்க் கசப்பு வந்தது. ஆயினும் வெளிக்காட்டிக் கொள்ளாமல், "சரிண்ணே.." என்று மெல்ல இழுத்தான்.

"இதை சரியாய் முடித்திடு... சிறுதொழில்

கூடாது என்பதே மெஸ்ஸேஜ். கூடவே கொஞ்சம் மதஒற்றுமையையும் மிக்ஸ் பண்ணி ஷூட் பண்ணியிருக்கிறார்கள்.

மனதில் விஜய் பதிகிறார். காவேரிக்கு வாழ்வு. டைட்குளோசப்பில் பொலபொல கண்ணீர் உகுத்து அதிர்ச்சி காட்டுகிறார்.

மஞ்சுளா, விஜயகுமார், எஸ்.எஸ். சந்திரன் - மூன்று பேரும் மூன்று விதத்தில் அய்யர் பாஷையை கடித்துக் குதறுகிறார்கள்.

கேட்கும் போது பாடல்கள் நன்றாக இருப்பது போல் தோன்றினாலும் நினைவில் நிற்க மறுக்கின்றன.

நல்ல விஷயம் சொல்ல ஆசைப்பட்ட டைரக்டர் சார், முதலில் எம் வாழ்த்துக்கள். ஆனால் சீன்களில் ஒன்று கூட வெயிட்டாகவேயில்லையே! என்ன பண்ணலாம்? வெளியே வரும் போது பாதிப்பே இல்லை சார்.

- துளசி

மானியம் வந்துருக்கு... அதுல உன் பெயரை சிபாரிசு செய்துடறேன். சொந்தமா கடை வைக்க மேஜை... எலெக்ட்ரிக் அயர்ன் பாக்ஸ் எல்லாம் இலவசமா கிடைக்கும். அதோட மானியமும் கிடைக்கும். நீயே ஒரு லாண்டரிக் கடை வைக்கலாம் தமிழ்மணி..."

எம்.எல்.ஏ.யின் வார்த்தை நெருப்பாய்ச் சுட்டது.

"இல்லேண்ணே... அது எனக்குப் பிடிக்கலே... ஏதாவது கவர்மெண்ட் ஜாப்..." தமிழ்மணி முடிக்கு முன்பு அவசரமாய்க் குறுக்கிட்டார் எம்.எல்.ஏ.

"என்னடா... பெரிய வேலை? ரெவின்யூ ஸ்டாம்ப் உத்யோகம்...? சொந்தமா தொழில் பண்ணலாம். கட்சி வேலையும் பார்த்துக்கலாம்..." என்று எம்.எல்.ஏ. பேசிக் கொண்டு இருக்கும்போதே, "ஸார்... தம்பி... வந்துருக்கு... உங்களைப் பார்க்கணுமாம்..." - ஒருவர் வந்து அவசரமாய்ச் சொன்னார்.

வாசலில் எட்டிப் பார்த்தார் எம்.எல்.ஏ. அங்கே... கல்லூரியில் பி.ஈ. படிக்கும் அவர் மகன் சுரேஷ்!

'ஒரு நிமிடம்' என்றபடி வெளியில் வந்த எம்.எல்.ஏ. மகனை இந்த இடத்தில் எதிர் பார்க்காதவராய்...

"என்ன சுரேஷ்... இங்கெல்லாம் வரக் கூடாதுன்னு உனக்குச் சொல்லி இருக்கேன் இல்லே" என்று கடிந்து கொண்டார்.

"இல்லேப்பா... நாளைக்கு காலேஜ் டூர்... போகணும். பணம் வேணும். ராத்திரி நீங்க பாட்டுக்கு கட்சி ஆபீஸ்ல தங்கிட்டா... அதுதான்..."

"சரி.. இந்தா ஆயிரம் இருக்கு.. போதுமா?" அவசரமாய் சட்டைப் பையில் இருந்து பத்து புத்தம் புதிய நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்துக் கொடுத்தார். "இன்று நைட்டே கிளம்பிடு..." என்றார்.

"இல்லே... நாளைக்குப் போனால் போதும்..."

"நோ. சொன்னால் கேளுடா. இன்றைக்கு.. ஒரு சின்ன கலவரத்துக்கு ஏற்பாடு பண்ணிட்டு இருக்கேன். அதுல உனக்கு எதுவும் ஆயிடக் கூடாது. நைட் திருவள்ளுவர்ல காலேஜ் போயிடு. என்ன சரியா?" என்று மகனை அனுப்பி வைத்தார் எம்.எல்.ஏ.

சுரீர் என்றது தமிழ்மணிக்கு.

தன் மகனை முன்ஜாக்கிரதையாக அனுப்பி வைக்கிறார். கலவரத்தில் அடிபட நம்மைப் போன்றவர்களைத் தூண்டுகிறார். தன் மகன் படித்து பெரிய என்ஜினியர் ஆக வேண்டும். ஆனால் தொண்டன் வேலைக்குப் போயிடக் கூடாது. மானியம் வாங்கி... லாண்டரிக் கடைதான் வைக்கணுமாம்...

எம்.எல்.ஏ.யின் மனத்தின் அழுக்கு எண்ணம் தமிழ்மணிக்குப் புரிந்தது.

"என்ன தமிழ்மணி... பத்து மணிக்கு எல்லாரையும் இங்கே கொண்டாந்துடு. விஸ்கி பார்ட்டி இருக்கு. அது முடிஞ்சதும்... நாளைக்கு ஊர்வலத்துக்குக் கிளம்பிட்டு இருக்குற ஏழெட்டுப் பசங்க.. கை.. காலு எல்லாம் லேசா ஒடச்சி வச்சிடுங்க..." என்று எம்.எல்.ஏ. கூறியதைக் காதில் கூட வாங்கிக் கொள்ளாது வேகமாய் நடந்தான் தமிழ்மணி. 'இந்த மனஅழுக்குப் பிடித்த கேவலப் பணியில் ஈடுபடுவதை விட... அழுக்குத் துணி துவைத்து சொந்தமாய் நாலு காசு சம்பாதிப்பது கேவலம் இல்லை...' என்பது தெளிவாய்ப் புரிந்தது.

**வி**யர்வையில் நனைய பொட்டி போடும் வடிவேலு அந்த நேரத்தில் மகனைப் பார்த்த ஆச்சரியத்தில், "யாரு தம்பியா... வாங்க தம்பி... ஏதும் பணம் வேணுமா தம்பி?" அவசரமாய் ஓடிப் போய் கல்லாப் பெட்டியைத் திறந்தான்.

"இல்லேப்பா.. வேண்டாம்" என்றான் தமிழ்மணி.

"என்ன... பணம் வேண்டாமா?" மகனை ஆச்சரியத்துடன் வடிவேலு பார்த்தான்.

"அப்பா... நீங்க டயர்டா இருப்பீங்க.. வீட்டுக்குப் போய் ரெஸ்ட் எடுத்துக்குங்க... நான் அயர்ன் பண்றேன்..."

'பேசுவது தமிழ்மணியா?' புரியாமல் வடிவேலு மகனை நோக்க, தமிழ்மணிக்கு மனசு அழுக்கு நீங்கி விட்டது என்பது வடிவேலுவுக்குப் புரியா விட்டாலும், தமிழ்மணிக்கு உலகத்தின் அழுக்கு அதிகம் புரிந்தது.



உள்ளே வந்து, அம்மா அருகே இல்லை என்ற மகிழ்ச்சியுடன், சட்டென்று கதவைத் திறந்து கொண்டு நுழைந்து தாழிட்டாள். அருகே மேசை மீதிருந்த குளிர்ந்த நீரை எடுத்து அவர் முகத்தில் வீசினாள். மறுபடியும் தண்ணீர் அடிப்பதற்கு முன்னால் தரையில் சுழன்று கொண்டிருந்த தாள்களை எடுத்துப் பார்த்தாள். மேலெழுந்தவாரியாகப் படித்து விட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டு அவற்றை ராஜாராமனின் மேசை இழுப்பறையில் இருந்த நாட்குறிப் பேட்டின் உள் அட்டைக்குள் மறைப்பாகச் செருகினாள். பிறகு மறுபடியும் அவர் முகத்தில் இரண்டு தரம் தண்ணீரை வீசினாள்.

ராஜாராமன் மெல்லக் கண் விழித்துப் பார்த்தார். நடந்ததை ஞாபகப்படுத்திக் கொண்டபின் கண்களைத் துடைத்துக் கொண்டு சுற்றிலும் பார்த்தார்.

"அப்பா அந்தக் கடுதாசித் தாள் ரெண்டையும் எடுத்து உங்க டயரி அட்டையில கண் மறைவாச் சொருகி வெச்சிருக்கேம்ப்பா. நான் இன்னும் சரியாப் படிக்கல்லே. மேலாகத்தான் பார்த்தேன். அம்மாவுக்குத் தெரிய வேண்டாந்தானே?"

"ஆமா. முதல்ல ரூம் கதவைத் திறந்துடு. உங்கம்மா வந்தா சந்தேகப்படுவா."

அஞ்சனா எழுந்து போய்க் கதவைத் திறந்த அடுத்த நிமிடத்தில் பாமா அங்கு வந்தாள்.

"அம்மா அப்பாவுக்கு மயக்கம் போட்டுடுத்து. சீக்கிரம் ஒரு கப் காப்பி எடுத்துண்டு வாம்மா."

பாமா ஓடினாள். ஐந்தே நிமிடங்களில் கண் கலங்கியவாறு காப்பியுடன் வந்து, அவர் கையில் அதைக் கொடுத்து விட்டு, "என்னன்னா ஆச்சு? எதுனால இப்படி மூர்ச்சை போட்டுடுத்து? நீங்க சம்பாதிச்சதும் போறும், சேர்த்து வெச்சதும் போறும்னா. பேசாம ஆத்துல இருங்கோ இனிமே. உங்களுக்கு உள்ளூறக் கவலை. மனசுல வெச்சுண்டு மறுகறேள்..." என்ற பாமா கண்கலங்கிப் போனாள்.

கட்டிலுக்கு அருகே இருந்த முக்காலியில் கால்கள் இடறியதில் அதுவும் கீழே சாய்ந்து விழ, அடுத்த கணத்தில் அந்த ஓசை கதவுக்கு வெளியே நாற்காலியில் அமர்ந்திருந்த அஞ்சனாவின் செவிகளையடைந்து, அவளது முதுகுத் தண்டை நிமிர்த்தியது.

அவள் உடனே எழுந்து போய்க் கதவைத் தட்டி, "அப்பா, அப்பா என்னப்பா சத்தம்?" என்றாள்.

பதில் இல்லை. கதவிடுக்கு வழியாக உள்ளே பார்த்தவள் திடுக்கிட்டுப் போனாள். முக்காலியும் அவரும் அருகருகே சாய்ந்து கிடக்க, தரையில் இரண்டு தாள்கள் மின் காற்றில் சுழன்றபடி இருந்தன. அவளுக்குப் புரிந்து விட்டது - ஏதோ மோசமான செய்தி என்று. பாமா கொல்லைப்புறத்தில், கிணற்றடிப்பக்கம் சென்றிருந்ததால் அவளுக்கு அவர் விழுந்த ஓசை கேட்டிருக்க வாய்ப்பில்லை. அஞ்சனா விரைந்து செயல்பட்டாள். துணி உலர்த்தும் கொடிக் கம்பை எடுத்துக் கொண்டு, வெளியே வாசற்பக்கமாகச் சுற்றிச் சென்று, சன்னல் வழியாக அதை உள்ளே நுழைத்து, மெதுவாக உட்புறத் தாழ்ப்பாளை நீக்கினாள். பிறகு கம்புடன்

ஜோதிர்லதா கிரிஜா

அவளைப் பார்த்ததும் அவருக்கு அழுகை பொத்துக் கொண்டு புறப்படும் போல் ஆயிற்று. அடக்குவது கடினமாக இருந்தது. கட்டிலில் ஏறிப் படுத்துக் கொண்டு, சுவர்ப் பக்கமாய்த் திரும்பிக் கொண்டார்.

"நான் பார்த்துக்கறேம்மா. நீ போ. நீ இங்கேயே நின்னுண்டு அழுதியானா அப்பாவுக்குத் தாங்காது."

"டாக்டருக்கு வேணா ஃபோன் பண்ணி வரவழையேன்."

"அதெல்லாம் வேண்டாம், பாமா. அசதிம்மா. வேற எதுவும் இல்லே... நீ போ. எனக்கு ஒண்ணுமில்லே. ஒரு அரை மணியில சரியாப் போயிடும்."

"நீ உங்கப்பா பக்கத்துலயே உக்காந்திருடி, அஞ்சனா. ஒரு அரை மணி கழிச்சு வரேன்."

**பா**மா போனதும் அஞ்சனா கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டு விட்டு, அந்தத் தாள்களை எடுத்து மறுபடி படிக்கலானாள்.

படித்து முடித்ததும், கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாமல், "என்னப்பா இது? இப்படி எழுதி இருக்கானே?" என்றாள்.

ராஜாராமன் கன்னங்களில் வழிந்த கண்ணீருடன் மகள் புறமாய்த் தம் கையை நீட்டி, அவள் கையைப் பிடித்துத் தம் மார்பின் மீது வைத்துக் கொண்டார். அவரது மேல் துண்டைத் தனது மறுகையால் எடுத்த அஞ்சனா, அதனால் அவர் கன்னங்கள் வழியே உருண்ட கண்ணீரை ஒற்றி எடுத்தாள்.

"அழாதங்கோப்பா. அருணுக்கு அப்படியெல்லாம் ஒண்ணும் ஆயிருக்காது. ஜெயில்லதான் இருப்பான். ஒருநாள் தப்பிச்சுண்டு வந்து திடீர்னு நம்ம முன்னால நின்னு அசத்தப் போறான், பார்த்துண்டே இருங்கோ."

"உன்னோட நம்பிக்கை பலிக்கட்டும்மா. பலிக்கட்டும்."

ராஜாராமனின் குரல் சன்னமாக ஒலித்ததைக் கேட்டு அஞ்சனாவுக்கு உள்ளூர அச்சமாக இருந்தது. அவரது அதிர்ச்சியின் கனத்தை அவளால் உணர முடிந்தது. அவளது கவலை அதிகமாயிற்று.

**அ**ஞ்சனா அவரை மேலும் சமாதானப்படுத்த வாய் திறப்பதற்கு முன், யாரோ வாசற்பக்கத்திலிருந்து, "சார், சார்" என்று கூப்பிட்ட குரல் கேட்டது. அஞ்சனா எழுந்து போனாள்.

கதவுக்கு அப்பால் தாடியும் மீசையுமாக நெற்றி முழுவதும் திருநீற்றுடன் அழுக்கு உடைகள் அணிந்தபடி ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான்.

"யாருங்க? என்ன வேணும்?"

அவன் அவளுக்குப் பதில் சொல்லாமல் சட்டென்று உள்ளே புகுந்து கதவைச் சாத்தித் தாளிட்டான். காய்ச்சல் வந்தவனுடையவை போல் ஒளிர்ந்த அவன் விழிகளும் அவனது திடீர்ச் செயலும் விளைவித்த அதிர்ச்சியில் அஞ்சனாவுக்குக் கணம் போல் வாயடைத்துப் போய் விட்டது.

## 22

**சு**தாரித்துக்க் கொண்டு குரல் எழுப்புவதற்கு அஞ்சனா முயன்ற போது அந்த மீசை-தாடி மனிதன் கடகடவென்று சிரிக்கத் தொடங்கினான்.

"என்ன, மிஸ் அஞ்சனா பயந்து போய் விட்டீர்களா? இவ்வளவுதானா சுதந்திரப் போர் வீராங்கனையின் துணிச்சல்?" என்று அந்த மனிதன் ஆங்கிலத்தில் கேலியாக வினவியதும் அஞ்சனாவின் முகத்தில் சிரிப்புத் தோன்றியது.

"ஓ, மிஸ்டர் நரேந்திரநாத் வாருங்கள், வாருங்கள்...."

"நான் நரேந்திரநாத் இல்லை. எனக்கு ராம் என்று பெயர். மறந்து விட்டீர்களா?"

"இல்லை நரேன், மறக்கவில்லை. ஆனால் இப்போ நாம் தனியே தானே இருக்கிறோம் என்ற துணிவில்..."

"சரி, அம்மா சௌக்கியமா? என்று கேட்டுக் கொண்டே அவன் முன்னால் நடக்க, அஞ்சனா பின்தொடர்ந்தாள். சமையற்கட்டில் அடுப்பருகே ஏதோ செய்து கொண்டிருந்த பாமா, "அஞ்சனா, இங்க சீக்கிரம் ஓடி வா. எந்தக் கடன்காரனோ சமையற்கட்டு வாசப்படியில நிக்கறான்..." என்றவாறு கையில் இருந்த கரண்டியைக் கீழே போட்டு விட்டுக் கதவு மூலையிலிருந்து விளக்குமாற்றைக் கையில் எடுத்துக் கொண்டு அவனை நோக்கி ஓங்கினாள்.

"அடிங்கோம்மா, நல்லா அடிங்கோ! ப்ரும்ஸ்டிக் கால எந்த அம்மா பிள்ளையை அடிப்பாங்கோ? அடிங்கோ, அடிங்கோ..." என்று அவன் முதுகை அவள் அடிப்பதற்கு வாகாய்க் குனிந்து கொள்ள, பாமா விளக்குமாற்றைக் கீழே போட்டான்.

"நீயா? நன்னாருக்



குப்பா! பயந்தே போயிட்டேன். எங்கே போயிருந்தே இத்தனை நாளும்?"

நரேந்திரநாத் சட்டென்று நெடுஞ்சாண் கிடையாக அவளுக்கு முன்னால் விழுந்து, கால்களில் தன் தலையைப் பதித்து இப்படியும் அப்படியும் உருட்டினான். அவள் கால்களை இரு கைகளாலும் பற்றிக் கொள்ளவும் செய்தான்.

"எழுந்திருப்பா, எழுந்திரு."

எழுந்தவனின் கண்கள் கலங்கி இருந்தன. அவனது பரவசத்தையும் கள்ளமற்ற சிரிப்பையும் பார்த்துப் பாமாவுக்கும் கண்கள் கலங்கின.

"நன்னாருப்பா. நன்னாரு. இந்த அக்கப்போர் வேலையையெல்லாம் விட்டுட்டு, ஒரு நல்ல வேலையாத் தேடிண்டு, சீக்கிரமே கல்யாணம் பண்ணிக்கோ. சவுக்கியமா இரு. இந்தக் காங்கிரஸ் மண்ணாங்கட்டி இதெல்லாம் உனக்கு வேண்டாம். யாரோ என்னமோ பண்ணிண்டு போகட்டும். வாழப் போற குருத்துக்கள்ளாம் இப்படி வருங்காலமே இல்லாம லோலோன்னு நாயா அலையப்படாதுப்பா."

"எல்லாரும் அப்படி நெனச்சா எப்படிம்மா? வெல்லக்காரனை வெரட்ட வாணாமா?"

"சரி, சரி. உன் தமிழால நீ என்னையே விரட்டிடுவே போலேருக்கு. ஒண்ணு பண்ணேன். தமிழைக் கொலை பண்ற மாதிரி இங்கிலீஷையும் கொலை பண்ணி வெள்ளைக்காரங்க முன்னால போய்ப் பேசு. அடுத்த நிமிஷம் எல்லா வெள்ளைக்காரங்களும் லண்டன்ல போய் நிப்பாங்க. அதைச் செய் முதல்ல."

"மாஜி படா தமாஷ், படா தமாஷ்..." என்று சிரித்தான் நரேன்.

"வாருங்கள்," என்று அஞ்சனா அழைக்க, இருவரும் ராஜாராமன் படுத்திருந்த அறையை அடைந்தார்கள்.

**கா**லடியோசை கேட்டு அவர் தலையைத் திருப்பிப் பார்த்தார்.

"அப்பா, யாருன்னு கண்டுபிடியுங்கோ, பார்ப்போம்!"

"தெரியலியே... சிவப்பிரகாசமோன்னு நெனச்சேன். ஆனா அவன் நல்ல உயரமாச்சே?" அவர் அவனைக் கூர்ந்து பார்த்தார்.

"இன்னா சார் இது? இன்னுமா தெரில்லே?" என்று நரேந்திரநாத் திருவாய் மலர்ந்ததும், "அடேடே வாப்பா, வா, வா. உக்காரு" என்று தம்மையும் அறியாமல் தமிழில் அவனோடு பேசிய அவருக்குச் சட்டென்று இந்திரநாத்பானர்ஜியின் நண்பன் எழுதிய கடிதம் நினைவுக்கு வர உடனே கண்கலங்கினார்.

"அஞ்சனா, கதவைச் சாத்து சொல்றேன்..."

"இங்க வேணாம்ப்பா. அப்புறம் அம்மாவுக்கு இல்லாத பொல்லாத சந்தேகமெல்லாம் வரும். மொட்டை மாடிக்குக் கூட்டிண்டு போறேம்ப்பா..." என்ற அஞ்சனா கடிதம் இருந்த நாட்குறிப்பேட்டைக் கையில் எடுத்துக் கொண்டு நரேந்திரநாத்பானர்ஜி பின்தொடர, மாடிப்படிகளில் ஏறினாள்.

"என்ன, அஞ்சனா? ஏதேனும் விசேஷமான செய்தியா? உங்கள் அண்ணனைப் பற்றியதா?"

அஞ்சனா மௌனமாக மொட்டை மாடியையடைந்து உட்கார்ந்த பிறகு அந்தக் கடிதத்தை எடுத்து அவனிடம் கொடுத்தாள். படித்துக் கொண்டிருக்கையிலேயே அவன் கண்கள் குபுகுபுவென்று பொங்கி விட்டன. கண்ணீர் மடைதிறந்தாற்போல் வழியலாயிற்று.

"தாதா, தாதா" என்றவாறு அவன் அழத் தொடங்கினான். 'தாதா' என்றால் வங்காளியில் மூத்த சகோதரன் என்பதாய் அஞ்சனா புரிந்து கொண்டாள். அவளுக்கும் கண்கள் கலங்கின. ஆண் பிள்ளை எவனும் இப்படிக் குலுங்கிக் குலுங்கி அழுது பார்த்திராத அஞ்சனா திகைத்துப் போனாள்.

"எங்கள் அப்பா இதைத் தாங்கவே மாட்டார், அஞ்சனா, தாங்கவே மாட்டார். அவரிடமிருந்து இதை மறைத்துத்தான் வைக்க வேண்டும். வேறு வழியே இல்லை... என்னுடைய அண்ணன் மிக நல்லவன். என்னை விட உயரமாகவும் நிறமாகவும் இருப்பான். நல்ல பலசாலி. இளைஞர்கள் உடம்பை வலிமையுடன் வைத்திருக்க வேண்டும் என்று

## அருள்வாக்கு

**நா**ம் இருக்கிற நிலையில் லோகத்தைப் பொய்யென்று நினைத்துக் கொள்ள முடியவில்லை என்பதால், "சரி, மெய்யென்றுதான் வைத்துக் கொள்" என்று சொல்லி, லோக க்ஷேமத்துக்கான கர்மாக்களை வேதம் கொடுத்திருக்கிறது. நாம் உள்ள நிலையில் அரூபமான ஒரே பரமாத்மாவை அபேதமாக உபாஸிக்க முடியவில்லை என்பதால்,. அநேகம் தேவதைகளின் உபாஸனைகளை அது கொடுத்திருக்கிறது. ஆனால் இப்படிக் கர்மாவும் உபாஸனையும் பண்ணும்போதே, 'லோகமெல்லாம் அடிப்பட்டுப் போய், கர்மாவும் நின்று விடுகிற ஞானநிலை நமக்கு வர வேண்டும்; பல தேவதைகளை உபாஸிப்பதாக இல்லாமல், பரமாத்மாவுக்கு அன்னியமாக நாம் என்றே ஒன்று இல்லை என்று கரைகிற நிலை நமக்கு வர வேண்டும்; அதற்குப் படியாக நமக்கு சித்த சுத்தியும்; மனஸின் ஐகாக்ரியமும் (ஒருமுனைப்



பாடும்) ஏற்படுவதற்காகவே, இந்தக் கர்மாக்களையும் உபாஸனைகளையும் வேதம் கொடுத்திருக்கிறது' என்ற அறிவோடு பண்ண வேண்டும். அப்படியில்லாமல், வெறுமே லௌகிகமான க்ஷேமத்தை உண்டாக்கிக் கொள்வது, தேவதைகளிடம் கொடுக்கல் - வாங்கல் வியாபாரம் மாதிரி யக்ஞம் கொடுத்து நன்மை பெறுவது என்று இதோடேயே நிறுத்திக் கொண்டால், ஸத்யஸாக்ஷாத்காரம் கிடைக்கவே கிடைக்காது. தேவலோகத்துக்குப் போனாலும், ஆத்மஸௌக்கியம் என்ற ஸத்ய ஸாக்ஷாத்கார ஆனந்தம் அதில் கிடைக்காது; மேலும் தேவலோக வாஸமும் நம் புண்ணியம் தீர்ந்தவுடன் முடிந்து, நாம் மறுபடி பூலோகத்தில் கர்ப்பவாஸம் பண்ணுவதற்காகத் திரும்பித்தானாக வேண்டும். ஓர் அளவுக்கு நம் இப்போதைய மனப்பான்மைக்கு விட்டுக் கொடுத்தும், நம்மை இன்றுள்ள நிலையிலிருந்தே சிறுகச் சிறுக (gradual-ஆக)ப் பக்குவப்படுத்தவுமே கர்மாவும், உபாஸனையும் வேதத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

அடிக்கடி சொல்லுவான். வெள்ளைக்காரர்களை விரட்ட வேண்டுமென்றால் நாம் மனத்தால் மட்டுமின்றி உடலாலும் வலிமை பொருந்தியவர்களாக ஆக வேண்டும் என்பது அவனுடைய கருத்து. ஆனால் உடல் வலிமையுள்ளவர்களில் சிலருக்கு இருக்கும் ஆணவமோ, முன்கோபமோ பிறரை வம்புக்கு இழுக்கிற குணமோ அவனுக்குத் துளியும் கிடையாது. எதிராளி சீண்டினாலும் பொறுமையை இழக்காதவன்... எதற்காக இவ்வளவும் சொல்லுகிறேனென்றால் அவனது இந்த அநியாயச் சாவுக்கு அவனது திமிரான பேச்சோ செயலோ ஒருபோதும் காரணமாக இருந்திருக்க முடியாது என்பதை உங்களுக்குச் சொல்லுவதற்காகத்தான்."

மறுபடியும் நரேந்திரநாத் அழத் தொடங்கினான்.

"உங்கள் துயரம் எனக்குப் புரிகிறது நரேந்திரநாத். இனி அழுது என்ன லாபம்? போனவர் திரும்பியா வரப் போகிறார்? இப்படியெல்லாம் பிறருக்கு அறிவுரை சொல்லுவது எளிதுதான். தனக்கென்று வரும் போது எல்லாமே வேறுதான். என் அண்ணாவுக்கு என்ன நேர்ந்ததென்று தெரியவில்லை. அவன் உயிருடன் இருக்கிறானா, சிறையில் இருக்கிறானா என்று தெரியவில்லை. என் அம்மாவுக்கு இந்தக் கடிதம் பற்றி நாங்கள் மூச்சுக்கூட விடப் போவதில்லை. எங்கள் அம்மாவைப் பொறுத்தவரையில் அவ்வப்போது லண்டனிலிருந்து அருண் பற்றிய நற்செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. அவன் படித்தது போதுமென்று எழுதி அவனைத் திருப்பி வரவழையுங்கள் என்று அம்மா பாட்டுப் பாடாத நாளே இல்லை. அப்பாவும் ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி நாட்களைக் கடத்திக் கொண்டு வருகிறார். இந்த விஷயமும் ஒருநாள் அம்மாவுக்குத் தெரிந்து விடுமோ என்னமோ."

சற்று நேரத்தில் காப்பியுடன் வந்து சேர்ந்த பாமா, "ஏன் இவன் என்னமோ போல இருக்கான்? அழுத மாதிரி இருக்கே? முகமெல்லாம் கன்னிக் கிடக்கு? ஏண்டி, அஞ்சனா? என்ன நடந்தது? அவாத்துல எல்லாரும் சுகந்தானே?" என்றவாறு காப்பிக் கோப்பைகளை இருவருக்கும் முன்னால் வைத்தாள்.

அஞ்சனா, 'அப்புறம் சொல்றேம்மா,' என்பது போல் சைகை செய்தாள்.

இதற்குள் அவளை ஏறிட்டுப் பார்த்த நரேந்திரன், "வேற ஒண்ணுமில்லேம்மா. எங்க எல்டர் ப்ரதர் செத்துட்டான்..." என்றான்.

"அடப்பாவமே, லண்டன்ல படிச்சிண்டிருக்கான்னு சொன்னியே, அந்தப் பிள்ளையாண்டானா?"

"ஆமாம்மா. அவந்தான்."

"சின்ன வயசில்லியோ? எப்படிச் செத்துப் போனான்?"

நரேந்திரநாத் பதில் சொல்லுவதற்குள் அஞ்சனா குறுக்கிட்டு, "ஏதோ விஷக் காய்ச்சலாம்மா. லண்டன் டாக்டர்களுக்கே ஒண்ணும் புரியலியாம்," என்று அவசரமாய்ப் பதிலிறுத்தாள்.

"என்னப்பா பண்றது? கஷ்டந்தான். ஆனாலும் மனசைத் தேத்திக்கத்தான் வேணும்... அஞ்சாறு நாள் இருப்பியோல்லியோ?"

"இருப்பேம்மா. உங்க வீட்லயே. நீங்க

பெர்மிட் செஞ்சா."

"தாராளமா இருப்பா. அழாதே. என்ன செய்யறது? பிறப்புன்னு வெச்ச பகவான் சாவுன்னு ஒண்ணையும் வெச்சுட்டானே?" என்றவாறு பெருமூச்செறிந்த வண்ணம் பாமா இறங்கிப் போனாள்.

நரேந்திரநாத் பானர்ஜி தன் அண்ணனைப் பற்றி அஞ்சனாவுக்குக் கதை கதையாய்ச் சொன்னான். காப்பியைக் குடித்து விட்டுக் கொஞ்ச நேரம் போல் அங்கே இருந்த பிறகு அஞ்சனா, "கீழே போகலாம் நரேந்திரநாத். அப்பா தனியாக இருக்கிறார்" என்றபடி எழுந்தாள். இருவரும் ராஜாராமனின் அறையை நோக்கி நடந்தனர்.

அவரைப் பார்த்ததும் நரேந்திரநாத்தின் உணர்ச்சிகள் மறுபடியும் பொங்கி விட்டன. அவனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமற் போயிற்று.

"அப்பா, அம்மாகிட்டே இவரோட அண்ணா விஷக் காய்ச்சல்ல செத்துட்டதாச் சொல்லி வெச்சிருக்கோம்..."

தமது கையை நீட்டி ஆதரவாய் நரேந்திரநாத் பானர்ஜியின் தோள் மீது வைத்துத் தட்டிய வண்ணம், "நரேன் அழாதே அப்பா. என்ன செய்யலாம்? பிறப்பும் சாவும் நம் கையில் இல்லை. மனசைத் தேற்றிக் கொள். அழாதே, அழாதே" என்று ஆறுதலாய்ப் பேசினார். அவருக்கும் கண்கள் கலங்கின...

பேச்சை திசைதிருப்பக் கருதி, "உன் செலவுகளுக்கெல்லாம் நீ என்ன செய்கிறாய்? எப்படிச் சமாளிக்கிறாய்?" என்று கேட்டார்.

"நான் செய்யாத வேலைகள் இல்லை. ரெயில்வே ஸ்டேஷனில் மூட்டை தூக்குவதிலிருந்து கடையில் கணக்கு எழுதுவது வரையில் எத்தனையோ தினுசான வேலைகளைச் செய்து வருகிறேன்."

"எந்த வேலையானாலும் கேவலமில்லை, நரேன். ஒரு கவலையால் கேட்டேன்."

"எந்த நேரத்தில் போலீஸ் என்னைப் பிடிக்குமோ என்ற கவலையில் சுதந்தரமற்று வாழ்கிறேன், அய்யா. இந்த நாடு முழுவதுமே சுதந்திரம் இழந்த நாடுதானென்றாலும், அதில் திரிந்து வாழும் மற்ற மனிதர்களுக்கு இருந்து வரும் சுதந்தரம் கூட எனக்கு இல்லாது போய் விட்டது." - இவ்வாறு சொல்லி விட்டு அவன் விரக்தியாகச் சிரித்தான்.

அதன் பிறகு சிவப்பிரகாசம் இன்று காங்கிரஸ் இயக்கத்தில் தம் இரகசியக் கூட்டாளி என்றும் காவல் துறையில் இருந்தபடியே சுதந்தர இயக்கத்தில் அவன் ஈடுபட்டுள்ளதையும் அவர் அவனுக்குத் தெரிவித்தார்.

ஏறத்தாழ இதே சமயத்தில் ஞானப்பிரகாசம் கண்களைக் கசக்கியபடி எழுந்து உட்கார்ந்தான்.

"என்ன, சிவா? இப்படி ஒரு தூக்கம் தூங்கிட்டேன்? கண்ணை இருட்டிக்கிட்டு வந்திடிச்சு. காப்பியைக் குடிச்ச அடுத்த நிமிஷத்துலயே கண்ணு சொருகிடிச்சு. காப்பியிலதான் ஏதோ கோளாறுன்னு தோணுது. உனக்கு எதுவும் ஆகலியா?" என்று கேட்டான்.

எச்சில் விழுங்கிய சிவப்பிரகாசம், "இல்லியே, ஞானம்? நான் நல்லாத்தானே இருக்குறேன்? பல நாளைத்து அசதியா இருந்திருக்கும்... அதான் தூக்கம் சொக்கிட்டு வந்திருக்கு..." என்றான்.

சில வினாடி இடைவெளிக்குப் பிறகு, "என்னமோ செபாஸ்டியன்னு ஒரு ஆளு பிள்ளையார் சிலைக்குப் பின்னாடி ஏதோ கவர் வைக்கப் போறான், அதை எடுக்கணும்னியே? போகல்லே?" என்றான்.

"இவ்வளவு நேரமமாயிடிச்சே? இன்னுமா அது அங்க இருக்கும்? சொந்தக்காரன் வந்து எடுத்துட்டுப் போயிருப்பான்..." என்றவாறு சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்த ஞானப்பிரகாசம் பின்கட்டுக்கு நடந்தான்.

வழவழவென்றிருந்த வாயைக் கொப்பளித்து விட்டுத் தண்ணீர் குடிக்க அடுக்களைக்குத் திரும்பியவன் கதவு மூலையில் கசக்கிப் போடப்பட்டிருந்த காகிதத்தைக் கவனித்து, அதைக் கையில் எடுத்தான். மருந்துக் கடையில் ஏதோ மாத்திரையைப் போட்டுக் கொடுத்த காகித உறை. அவனுள் ஏதோ நெருடியது. அதைச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு கூடத்துக்கு வந்தான்.

"உனக்கு லீவ் சொல்லிட்டேன், ஞானம். வேணாக் கான்சல் பண்ணிட்டுப் போய்க்க. இன்னும் அரை நாள் இருக்குதே?" என்ற சிவப்பிரகாசத்தின் மீது ஞானப்பிரகாசத்தின் பார்வை ஆழமாகப் பதிந்திருந்தது. அவனது பார்வையில் ஏதோ வித்தியாசமாய்ப்பட, சிவப்பிரகாசம் கண்மலர்த்தி அவனைப் பார்த்தான். தம்பிக்கு ஏதோ நெருடல் என்பதைப் புரிந்து கொண்டான். அவனது இதயம் படபடத்தது.

(தொடரும்)



**"என்ன சார்... இவ்வளவு சீக்கிரம் ரேஷன் கடைக்குக் கிளம்பிட்டீங்க...?"**

**"பாமாயில் வர்ற கப்பல் மலேசியாவை விட்டுக் கிளம்பிடுச்சாம். சீக்கிரமா போய் 'க்யூ'வில் நில்லுங்கன்னு என் மனைவி சொல்றா...!"**

**- ஏ. வி. கிரி**

# ஈஸ்வரியில்

## உங்களது சேமிப்பு



இரட்டிப்பு ஆகிறது

## 37 மாதங்களில்

குறைந்தபட்ச டெபாசிட் தொகை ரூ. 25,000/-

| முதலீடு | 37வது மாதம் முடிவில் |
|---|---|
| ரூ. 25,000 | ரூ. 50,000 |

ஊக்கத்தொகை 1.5% அல்லது வெள்ளி காமாட்சி விளக்கு

## ஈஸ்வரி வழங்குகிறது ஆண்டுக்கு

# 24%

**வைப்புநிதி திட்டத்தில்**

குறைந்தபட்ச டெபாசிட் தொகை : ரூ. 10,000/-
முதலீட்டுக்கான கால அளவு : 1 வருடம்

**"பின் தேதியிட்ட காசோலைகள் - முன்னமே கொடுக்கப்படும்"**

ESWARI
GROUP OF COMPANIES



## ஈஸ்வரி பைனான்ஸ் அண்ட் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 18. ஃபோன்: 455349/459557.

கிளைகள் :

| பாரிமுனை | புரசைவாக்கம் | தி. நகர் | திருவல்லிக்கேணி |
|---|---|---|---|
| நெ. 12, ரட்டன் பஜார், பாரிமுனை சென்னை - 600 003. போன்: [illegible] | 69, முதல் மாடி, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 007. போன்: [illegible] | 49, வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை - 600 017. போன்: [illegible] | நெ. 11, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-600 005. |

| குரோம்பேட்டை | நங்கநல்லூர் | சாலிகிராமம் |
|---|---|---|
| நெ. 72, ஜி.எஸ்.டி. ரோடு, குரோம்பேட்டை, சென்னை-600 044. | நெ. 19/8, 4வது மெயின் ரோடு, முதல் மாடி, நங்கநல்லூர், சென்னை-600 061. போன்: [illegible] | நெ. 11, ஆற்காடு ரோடு, சாலிகிராமம், சென்னை - 600 093. போன்: [illegible] |

Lotus

**உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்**

● எம். ஜெயமுருகன், ரிஷிவந்தியம்.

? "அரசியலில் குதிக்க அனுமதி தர வேண்டும்" என்று கேட்கிறாரே, கடத்தல் மன்னன் வீரப்பன்?

! இங்கேயும் ஒரு பூலான்தேவியா? சபாஷ்! சரியான போட்டி!

● கோ. ரா. சந்திரன், சங்கரன்கோயில்.

? தீபாவளிக்கு ஒரு இனிப்புச் செய்தி சொல்லுங்க?

! அமரர் "கல்கி" எழுதிய பார்த்திபன் கனவு கல்கி தீபாவளி சிறப்பிதழில் ஆரம்பம். அதைவிட என்ன!

● என். வி. ராஜேந்திரன், சின்னசேலம்.

? காதலனில் பிரபுதேவாவின் நடிப்பு, நடனம் பற்றி?

! நடிப்பை யார் கேட்டார்கள்? எல்லா ஜனமும் ஒட்டு மொத்தமா வோட்டுப் போடறது அந்த வெட்டி வெட்டி இழுக்கிற டான்ஸுக்குத்தானே! பார்த்தாலே சுளுக்கிக்கிற மாதிரி... பேஜாருப்பா!

● எஸ். கண்ணன், மதுரை.

? 'ஜெ' பேச்சுக்கள் புத்தகமாக வெளியிடப்படுவது குறித்து...?

! சே! காகிதத்திலா அச்சிடுவது? பொன் னேட்டில் பொறிக்க வேண்டாமா! சுத்த மோசம்!

● எஸ். நாரம்புநாதன், காஞ்சிபுரம்.

? "நான்காம் வகுப்பு மாணவர்க்குப் பெயரைக் கூட எழுதத் தெரியவில்லையே" என்று கல்வி அமைச்சர் பொன்னுசாமி கூறியிருப்பது?

! நாட்டின் வளர்ச்சிக்கு மிக முக்கியமான ஒன்றான கல்வித் துறையில் அரசும் சரி, ஆசிரியர்களும் சரி மெத்தனம் காட்டுவதை உணர்த்துகிறது. உண்மையை ஒப்புக் கொண்டதற்குப் பாராட்டு. செயல்திறனின் மைக்குக் கண்டனம்.

● எஸ். குமார், காரைக்குடி.

? கொலுவில் இருக்கும் பொம்மைகளுக்கும் மந்திரிகளுக்கும் ஏதாவது வித்தியாசம் உண்டா?

! தலையாட்டி பொம்மைகள் கூட ஊழல் செய்வதில்லையே!

● புளியரை கணேசன், சென்னை.

? பிளேக், இந்தியாவில் பரவ அயல்நாட்டு சதி காரணமா?

! திரும்பிய பக்கமெல்லாம் குப்பைகளைக் குவித்து நாட்டையே குப்பைமேடாக்கிக் கொண்டிருக்கும் போது, 'அயல்நாட்டுச் சதி' என்று புதிய காரணம் தேடுவானேன்?

● க. பாஸ்கரன், சென்னை.

? புனிதமான அரசியல்வாதி ஒருவரைக் குறிப்பிட முடியுமா?

! என்ன சார் இது; அடுத்த படியா சூடான ஐஸ்கிரீம் கேட்பீங்க போலிருக்கே!

● எம். ரத்தினவேல், பொன்மலை.

? இன்றைய அமைச்சர்களில் சுயசேமிப்பில் சிறந்தவர்கள் யார்? தராசில் நிறுத்துக் கூறவும்!

! அதற்கு தராசு காணாதுங்க. பிளாட்ஃபாரம் வேயிங் மிஷின் கூட எகிறிப் போகும்!

● எஸ். ஈஸ்வரன், திருச்சி.

? நா. காமராசன் அ.தி.மு.க.விலிருந்து விலகி காங்கிரஸில் சேர்ந்திருப்பது பற்றி...?

! கொஞ்ச நாள் பொறுங்க. இந்தக் கேள்வியையே புரட்டிப் போட்டுக் கேட்கிற வேளை வரும்.

● எம். பிரபு, குமராட்சி.

? காணக்கிடைக்காத அரசியல்வாதி யார்?

! ஜெயித்த பிறகு தொகுதிக்குப் போகாத எல்லா எம்.எல்.ஏக்களும்தான்!

● கே. வி. சுகுமார், சென்னை - 39.

? குன்னக்குடி, மேண்டலின் சீனிவாஸ் ஒப்பிடுக.

! ரெண்டு பேருக்குமே ராமானுஜ மூளை; பி.டி. உஷா வேகம். இரண்டையும் சேர்த்துப் பார்க்கக் கூடியவர்களுக்கு ரசிக்கும்.

● பி. என். ஜெய்சங்கர், திருவாரூர்.

? "மகாத்மாவின் கொள்கைகளைக் கடைப்பிடித்து தமிழகத்தில் அமைதியை நிலைநாட்டியுள்ளார் ஜெ" என்கிறாரே, அமைச்சர் கிருஷ்ணசாமி?

! ஆதிபராசக்தியையே

• அரசியலில் குதிக்க...



• நடிப்பு - நடனம்



• கேள்வி புரளும்!



## 'ஜெ' பேச்சுக்கள் புத்தகமாக

இழுத்தவங்க அண்ணாவைச் சும்மா விடுவாங்களா? அவரையும் வெற்றிகரமா அவமானப் படுத்திட்டாங்க; அவ்ளோதான்!

● நாஞ்சில் க. நாகராஜன், பரமக்குடி.

***? கும்பகோணத்தில் மாவட்ட ஆட்சியரிடமிருந்து வீட்டுக் கடன் காசோலையைப் பெற்றுக் கொண்டு மேடை விட்டிறங்கியதுமே அந்த ஏழைகளிடம் அதிகாரி ஒருவர் லஞ்ச வேட்டையில் இறங்கினாராமே?***

! அதில் அதிசயப்பட ஒன்றுமே இல்லை. இன்று பகிரங்கமாகவும் கூச்சநாச்சமின்றியும் நடப்பதுதான் அது. என்ன, பெரிய பதவியில் இருக்கிறவங்க பணக்காரப் புள்ளிகளிடம் வேட்டையாடறாங்க; சிறிய அதிகாரிகள் சாமானியரைக் கசக்கிப் பிழியறாங்க. அவ்வளவுதான் வித்தியாசம்.


• பாராட்டு - கண்டனம்


• ஞானத்துடன் வேகம்


• வேகத்துடன் ஞானம்


• புனிதமான மரணம்

● எம். ரேவதி, மன்னார்குடி.

***? சமீபத்திய பத்திரிகைச் செய்திகளில் உங்களை மிகவும் கலக்கமடைய வைத்த செய்தி?***


• மகாத்மாவையும் இழுத்தார்

! டாக்டர் சஞ்சீவ் அவர்களின் மறைவு. பழுத்த பழமாகத்தான் காலமானார் என்றாலும் கண்களில் நீர் திரையிட்டது எனில் காரணம், 'மருத்துவம் என்பது பணம் சம்பாதிக்க அல்ல; சேவை புரியவே' என்பதற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர் அவர். நோயாளியிடம் "இவ்வளவு கொடு" என்று கேளாமல், "உன்னால் கொடுக்க முடிந்ததைக் கொடு" என்று கூறி, அதையே ஒரு கொள்கையாக்கி, அதன் அடிப்படையில் "வாலண்டரி ஹெல்த் சர்வீஸஸ்" என்ற முதல்தரமான மருத்துவமனையை உருவாக்கி நடத்துவதில் மாபெரும் வெற்றி கண்டவர். பிரபலமானவர்களின் மரணம் பல உண்டு; இதுவோ புனிதமானவரின் மரணம். அபூர்வம்.

● ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

***? எளிமை, அன்பு, அடக்கம் - இந்த மூன்றுக்கும் சொந்தக்காரர் யார்?***

! 'ஜெ'தான். 'பரிசுப் பொருள்கள் எனக்குக் கொடுக்காதீங்க' - ஆஹா, என்ன எளிமை! 'ஆனா நீங்க பிரியப்பட்டு தரதை நான் வேண்டாம்னும் சொல்லக் கூடாது' - ஹய்யோ! எத்தனை அன்பு! 'அதனால கட்சிக்குக் கொடுத்துடுங்க.' - ஓ! அடக்கத்தின் உச்சம்!

● ஏ. ஜஹ்பர் காதர், அரியநாயகிபுரம். ❑

***? தொலைக்காட்சியில் உருதுமொழி செய்தி வாசிப்***

# வெளியிடப்பட்டது குறித்து...?

***பதற்கு எதிரான கலவரம் பற்றி தராசின் கருத்து என்ன?***

! பத்து சதவீதம் முஸ்லிம் சமுதாயம் உள்ள இடத்தில் உருது செய்தி ஒளிபரப்பலாம் என்ற ஆய்வுக் குழு சிபாரிசை ஏற்றுச் செய்யப்பட்ட காரியம். இதற்கு எதிர்ப்பும் கிளர்ச்சியும் தோன்றி, வன்முறை - துப்பாக்கி சூடு எல்லாம் நடந்தது எனில், அரசியல் நோக்கும் குறுகிய மொழிப்பற்றுமே காரணம். இதன் மறுபக்கமாக, இத்தகைய நிலை உருவாகும் என்று எதிர்பார்த்து, தூர்தர்ஷன் எதிர்ப்புத் தோன்ற முடியாத நேரத்தினைத் தேர்ந்தெடுத்து ஒளிபரப்பியிருக்கலாம். மொத்தத்தில் சகிப்புத் தன்மை குறைவால் கடுகு, மலையாகி, எரிமலையாகி வெடித்திருக்கிறது.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் : ஏ. ஜஹ்பர் காதர், அரியநாயகிபுரம் (அஞ்சல்), விளாத்திகுளம் வட்டம், சிதம்பரனார் (மாவ) 627 901.

# பாலம் பாலம் பாலம் பாலம் பாலம் பாலம்

●● கோழிப்பண்ணை தொடங்க எண்ணம். முன் அனுபவம் இல்லை. விஷயம் அறிந்தவர்கள் உதவ முடியுமா?

- எஸ். சம்சுதீன்,
14 B/7 ராஜம்பேட்டை தெரு,
தக்கோலம் - 631 151.

●● பின்வரும் பெரிய எழுத்துப் புத்தகங்கள் தேவை - ஒவ்வொரு பிரதி. சன்மானம் அனுப்பப்படும். 1. தருமர் அஸ்வமேத யாகம் 2. கோவலன் கதை 3. சித்திரகுப்தனார் கதை. (அனைத்தும் வெண்பா நடையில் பெரிய எழுத்தில் அமைந்தவை)

- Mr. Jegateesan Iyadurai,
162, Avenue Jean Lolive,
93500, Pantin, France.

●● "தேனூற்று" என்கிற இலக்கிய மாத இதழை ஆரம்பித்துள்ளோம். வளரும் எழுத்தாளர்கள் கவிதை, கதை போன்றவை அனுப்பலாம். கிராமப்புறங்களிலிருந்து அதிக படைப்புக்களை வரவேற்கிறோம்.

-கவிப்பித்தன்
பொறுப்பாசிரியர்,
"தேனூற்று"
"தென்றல் இல்லம்,
வசூர் அஞ்சல் - 632 514.

●● தமிழக கிராமங்களில் நிலவும் காவல் தெய்வம் முனீஸ்வரர் வழிபாடு முறைகள், வரலாறு தொடர்பான நூல்கள், கட்டுரைகள் தேவை. உரிய சன்மானம் வழங்கப்படும்.

-செ. செல்வராஜ்,
73, காய்கறி மார்க்கெட் சாலை,
பவானி - 638 301.

●● புத்தக பைண்டிங் தொழில் பற்றி அறிந்து கொள்ள விரும்புகிறேன். உதவ முடியுமா? இது தொடர்பான புத்தகங்கள் அனுப்பினால் தபால் செலவு ஏற்கிறேன்.

-மோ. வேங்கடேசன்,
36/C, TMN கோயில் தெரு,
தக்கோலம் - 631 151.

●● நண்பர்கள் பதினைந்து பேர் பக்தி-பஜனை பாடல்களை இனிமையாகப் பாடி வருகிறோம். ஆன்மிக அன்பர்கள் எங்களுக்கு வாய்ப்புக்கள் வழங்கி ஆதரிக்க வேண்டுகிறோம்.

- மாரியம்மன் கோயில்,
ஸ்ரீராமர் பஜனைக் குழு.
4, வீரபாண்டி,
கோவமுத்தூர் - 641 019.

●● பிஎஸ்ஸி முதலாமாண்டு படிக்கிறேன். படித்து முடித்தவர்கள் புத்தகங்கள் இலவசமாகத் தந்தால் நன்றி.

-எஸ். முத்துக்குமார்,
512B, வடக்கு மலையடிப்பட்டி,
இராசபாளையம் - 626 117.

●● தொழில் ஆலோசனை துறையில் நல்ல அனுபவமும் ஏற்றுமதித் துறைக்குத் தேவையான உற்பத்தியாளர் தொடர்பும் உள்ள எனக்கு, பங்குதாரர் தேவை.

-ப. குணசேகரன்,
எபனி எண்டர்பிரைசஸ், த.பெ.எண்.6888
அண்ணாநகர் (மேற்கு),
சென்னை - 600 040.

●● வி.சி. கோபாலரத்தினம் எழுதிய "சென்னை உயர்நீதி மன்றம் 100 ஆண்டுகள்" புத்தகத்தை அடைந்திட உதவி தேவை.

-ந. தர்மேச்வரன்,
332/2 CF எஸ்டேட்,
அரவங்காடு,
நீலகிரி - 643 202.

●● மாணவர்களுக்கு சேவை புரிய School of Creative Intelligence தொடங்கியுள்ளோம். இன்ஜினீரிங், மருத்துவக் கல்லூரி நுழைவுத் தேர்வு, அரசுத் தேர்வுகளில் அதிக மதிப்பெண்கள் பெற வழிமுறைகள் கற்றுத் தருகிறோம்.

-டாக்டர் எஸ். ராஜகுரு,
"சேர்மன் வீடு"
கள்ளிகுடி - 626 701.
மதுரை (மா.வ.)

●● அமரர் "கல்கி" முதல் "பிரபஞ்சன்" வரை பல எழுத்தாளர்களின் 500க்கு மேற்பட்ட புத்தகங்கள் உள்ளன. மன நிம்மதிக்காக யாத்திரை கிளம்பும் நான் இவற்றை ஆர்வமுள்ளோருக்கு விற்று விடத் தயாராக உள்ளேன்.

-எல். கோபாலகிருஷ்ணன்,
13, காந்தி ரோடு,
அரக்கோணம் - 631 001.

(பாலம் மூலம் இணையும் கல்கி வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது. ஆர்.)

பாலம் பாலம் பாலம் பாலம் பாலம் பாலம்

# அந்தரங்க சுகம் தரும் அழகிய ஆடைகள்!

madhu ads

ஆனந்த் — சுகமான உள்ளாடை

Mfrs ஆனந்த் ஹொஸைரீஸ்,
505-A, அவினாசி ரோடு,
திருப்பூர்-641 603.




## ஆனந்த்

பனியன்கள், ஜட்டிகள், பேண்டீஸ் மற்றும் 'T' சர்ட் ரகங்கள்

மொத்த விற்பனையாளர்கள்:

சென்னை: கார்ப் எண்டர்பிரைசஸ், போன்: 845443. மதுரை: ஆனந்த் எண்டர்பிரைசஸ், போன்: 33315 (P.P.) திருச்சி: கரீம் ஸ்டோர்ஸ், போன்: 23742. கோயம்புத்தூர்: L.T.M. எண்டர்பிரைசஸ், போன்: 234780 (P.P.) சேலம்: ஸ்ரீ லக்ஷ்மி ஏஜென்ஸிஸ், போன்: 65890 (P.P.) வேலூர்: ஆனந்த் ஹொஸைரீஸ், திருப்பூர் போன்: 21994 / 24879. பாண்டி: சரவணா டெக்ஸ்டைல்ஸ், போன்: 29869. ஆனந்த் சில்க் ஹவுஸ், போன்: 37006 / 30643. பெங்களூர்: பிரைட்வேஸ், போன்: 237504 / 239835

இரண்டு விவசாயிகள். ஒருவர் கர்மயோகி; மற்றொருவர் சராசரி. சராசரி விவசாயி, கரும்பு பயிரிடுவதை விட கஞ்சா பயிரிட்டால் காசு கூட கிடைக்கும் என்றால், பயன் மீது வைத்த பற்றால், வெட்கம் இன்றிக் கஞ்சா பயிர் செய்வார். கர்மயோகி அப்படிச் செய்வாரா? மாட்டார். உழைப்பு அவரது தவம். உழவே அவரது ஜபம். வேள்வியிலிருந்து விலக்க முடியா அக்கினி போல விவசாய பூமியில் இருந்து விலக்க முடியாதவர் அவர். உழைக்காமல் வரும் காசு அவருக்கு

# உழைப்புக்குப் உரிமை உண்டு!

அருவருப்பு தரும். கரன்சி காகிதங்களை மட்டுமே தின்னும் பணப்பசி அவருக்கு இருக்காது.

அந்தக் கர்மயோகியின் - விவசாயியின் - சாம்ராஜ்யம் விசாலமானது. கலப்பையும் கையுமாக அவர் களத்தில் இறங்கும் போது, கதிரவனே அவரைக்

## சுகி சிவம்

கைநீட்டி வரவேற்கிறான். அந்தக் காலைக் கதிரவன் - ஒரு கர்மயோகியின் வரவுக்காக வானம் வைக்கும் வரவேற்பு வளையம். இவரது கம்பீரத்தில் கால் பங்காவது கஞ்சா பயிரிடுபவன் அனுபவித்தது உண்டா? தேசத்தின் தேவைகளை நெல்லாலும் கோதுமையாலும் நிறைவேற்றும் கடமை உணர்வுமிக்க விவசாயிகள் - கர்மயோகிகள் பாரதத் தாயின் தவப் புதல்வர்கள்.

இது கருதியே செயலின் பயனில் ஆர்வம் செலுத்துவோரை விட செயலில் ஆர்வம் காட்டுபவரைக் கீதை கொண்டாடுகிறது. செயலின் பயன் எப்படியும் வரத்தான் போகிறது! அதிலிருந்து விலகி நின்று செயலை நேசிக்க நாம் பழக வேண்டும்.

ஆசார்ய வினோபாபாவே எளிமையாக விளக்குகிறார்... "குழந்தை விளையாடுகிறது. அது விளையாடுவதில் உள்ள இன்பத்திற்காகவே விளையாடுகிறது. இதனால் அதற்கு உடற்பயிற்சியின் பயன் தானே கிடைக்கிறது. ஆனால் அப் பயனிடத்தில் அதற்குக் கவனம் இருப்பதில்லை. அதற்கு இன்பம் முழுதும் விளையாட்டிலேதான்."

சமுதாயம் செம்மையாகச் செயல்பட காரியம் முக்கியம். காரியத்தின் விளைவுகளின் மீதுள்ள கற்பனை, எதிர்பார்ப்பு, ஆசை, காரியத்தையே கெடுத்து விடுகிறது! நண்பர்களே, பள்ளிக்கூடத்தில் படித்த பழைய கதை... நினைவிருக்கிறதா? கண்ணாடிப் பொருட்கள் விற்கும் வியாபாரி ஒருவன்... ஓய்வுக்காக மர நிழலில் படுத்தபடி கற்பனை செய்கிறான்.

கூடையில் உள்ள இந்தக் கண்ணாடிப் பொருட்களை நல்ல விலைக்கு விற்றால் நிறைய லாபம் வரும். அதையும் முதலீடு செய்து விற்றால் பல மடங்கு லாபம் வரும். பிறகு பெரிய பணக்காரன் ஆவேன். பணக்காரன் ஆனதும் பணக்காரன் வீட்டில் பெண் எடுப்பேன். அவள் பணத் திமிரால் என்னை அவமதித்தால்... ஆஹா... அவளை இப்படித்தான் எட்டி உதைப்பேன் என்று கூடையை உதைக்க.. ஐயகோ... முதலுக்கே மோசம். அவன் எதிர்காலம் சுக்குநூறானது. செயலின் பயன் மீதான ஆர்வம் கொண்டவர் நிலை, பெரும்பாலும் இந்தக் கண்ணாடி வணிகரின் கதைதான்!

பாடுபட்டு ஒரு செயலைச் செய்து, அதன் பலனில் இருந்து விலகி நிற்பது என்பது முடிகிற காரியமா? அப்படியானால் செயலின் பயன் மீது நமக்கு

உரிமை கிடையாதா? உண்டு, உண்டு. உரிமை இல்லை என்று கீதை ஒருபோதும் சொல்லவில்லை. முப்பது நாளும் உழைத்து விட்டு ஒன்றாம் தேதி சம்பளம் வாங்காதே என்கிற விபரீதமான அர்த்தம் அதற்கில்லை. ஒன்றாம் தேதி சம்பளத்திற்காகவே முப்பது நாளும் குப்பை கொட்டாதே என்பதுதான் அதன் ஜீவன்.

மனிதர்களை மூன்று வகையாகப் பிரிக்கிறது கீதை. "ஒரு செயலைச் செய்து விட்டு, பயனை மட்டும் விட்டு விடுவதா... என்னால் முடியாது! செயலையும் விட முடியாது. பயனையும் விட முடியாது. ஏன் நான் பயனை விட வேண்டும்" என்று போராடுவது ரஜோகுணம். பயனை விடுவது என்றால் செயலையும் விட்டு விடுவோம் என்று சோம்பிப் படுப்பது தமோ குணம். செயலைச் செம்மையாகச் செய்து விட்டு பலனில் பற்று வையாது விலகி நிற்பது சத்வ குணத்தின் இயற்கை. அசாத்திய துணிவு - உண்மை உணர்வுடைய ஆன்ம ஞானிகளாலேயே இது முடிகிறது!

# பலன் தேடும்



உலக வரலாறு படித்தவர்கள் ஓர் உண்மையை அறிவார்கள். உலகெங்கும் தங்கள் மக்கள் விடுதலைக்குப் போராடிய தலைவர்கள் விடுதலை விழாவில் முன்நிற்பர். வெற்றியின் பயனாக விடுபட்ட நாட்டின் தலைமைப் பொறுப்பு தரப்படும்; அல்லது பெறப்படும். ஆனால் இந்தப் பாரத நாட்டில்தான் விடுதலைப் போருக்குத் தலைமை ஏற்ற காந்திமகான் விடுதலை பெற்ற நாட்டின் தலைமை ஏற்க விரும்பவில்லை. கொடியேற்று விழாவின் கோலாகலங்களில் மாலைக்காகத் தோள்களைத் தயார் செய்து கொள்ளாமல், தேசத்தின் நிர்மாணப் பணிகளுக்கு மக்களைத் தயார் செய்து தம்மை அர்ப்பணித்துக் கொண்டார்.

# வட்ட மேஜை

♦ ஒரு சக பத்திரிகை பெற்ற வான ளாவிய வெற்றி பற்றி நீங்கள் எழுதிய தலையங்கம் பத்திரிகாதர் மத்தின் மீது தாங்கள் கொண்டுள்ள அக்கறையைப் பறைசாற்றி விட்டது.
திருவண்ணாமலை,
என். சண்முகம்.

♦ கல்கியில் வெளியான டைரக்டர் பாலசந்தர் தொடர் பற்றி விகடன் மூலம் வாதப் பிரதிவாதங்கள் நடந்து வரும் வேளையில், விகடன் ஆசிரியர் தொடர்ந்த வழக்கில் வெற்றியடைந்ததைப் பாராட்டித் தலையங்கம் எழுதி நீங்களும் வானளாவ உயர்ந்து விட்டீர்கள்.
கும்பகோணம், டி. எஸ். சீதாராமன்.

♦ திட்டங்களேதும் இல்லாததால் மழைத் தண்ணீர் எப்படி வீணாகக் கடலில் கலக்கிறதோ, அதே போல் வீணாகும் மாணவர்களின் சக்தியை நல்ல வழியில் திருப்ப வேண்டும். சமுதாயத்தில் பொறுப்புள்ள பதவி யிலும் நிலையிலும் இருப்பவர் களான ஆசிரியர்கள், பெற்றோர், கல்வியாளர்கள் ஆகியோர்தான் அதற்கான பிள்ளையார் சுழியைப் போட வேண்டும்.
தென்காசி, எஸ். ஜெகன்.

♦ மகளிர் கல்லூரிகளில் 'அர சியல், யூனியன் என்ற எந்தப் பிரச்சனையும் இல்லாதிருப்பதால், மாண விகள் தங்கள் படிப்பில் முழு கவனம் செலுத்திப் படித்து முன் னேறுகிறார்கள். மாணவர்கள் கல் லூரிப் பருவத்திலேயே அரசியல் சாக்கடையில் விழுந்து விடுவதால் தான் அவர்களின் முன்னேற்றம் பாதிக்கப்படுகிறது.
தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

♦ ஒரு திரைப்படத்தில் மாணவர் களை உருப்படியாகப் பயன்படுத் தினால், ஒன்பது படங்களில் அவர்களை வெறும் கலாட்டாப் பேர் வழிகளாகவும், காதல் மட்டும் செய்பவர்களாகவுமே சித்திரித்து, சமுதாயத்தில் மாணவர்களின் பங்கைக் குறைத்து விடுகிறார்களே, இந்த சினிமாக்காரர்கள்!
மணக்காடு, ஸ்ரீவஹிதாபேரி.

♦ கட்டுரை ஜோர். ஆனால் அட்டைப்படம் எடுத்தவர் யார்? பிரசுரிக்கவேயில்லையே!
சென்னை - 5, கண்ணன்.
(வண்ணப்படம் எடுத்தவர் : யோகா. இடம் பெற்றவர்கள்-இடமிருந்து வலமாக : ஷ்யாம், கிஷோர், ஐயப்பன், பத்மா, ஆர்த்தி, மாளவா — ஆர்.)

தடாவில் தள்ளிவிடப் போகிறார்கள்...

♦ 'அம்மா'வின் திண்டுக்கல் விசிட்டிற்கு முன்பே நந்தியாய் நின்று (சென்று) அங்குள்ள அவலங் களை எடுத்துரைத்தீர்; இந்த வாரம் தஞ்சை உலகத் தமிழ் மாநாட்டையொட்டி சிவ பூஜையில் கரடியாய்ச் சென்று (புகுந்து) கலகம் செய்து உள்ளீர்! இப்படியே நீர் சென் றால் அம்மாவின் பயணத்திற் குத் தடையாய் உள்ளீர் எனக் கூறி, உம்மையும் தடாவில் தள்ளி விடப் போகிறார்கள். ஜாக்கிரதையாக இரும்.
பவித்திர மாணிக்கம்,
ஆர். பாஸ்கரன்.

♦ நடைப் பயணத்தின் மூலம் சமுதாயத்திற்கு ஆற்ற வேண்டிய கடமையை உணர்ந்ததாகக் கூறிய வை.கோபால்சாமி, அதன்படியே கடமையை ஆற்றத் தொடங்கி னால் மேலும் பாராட்டுக்குரியவ ராக இருப்பார்.
சேலம் - 6, பொன். குமார்.

♦ புனிதனின் 'மூன்று காட்சி கள்' சிறுகதை மூன்று தடவை படித்தும் அலுப் புத் தட்டவில்லை. பாராட் டுக்கள்.
வந்தவாசி, எம்.எம்.ஆனந்தன்.

♦ பிளேக் நோய் பற்றிய தகவல் தொகுப்பு நெஞ்சை உறையச் செய்தது. கதிகலங்கச் செய்யும் இந்த நோய் நம் எதிரிக்குக்கூட வரவே கூடாது சாமி!
திருச்சி, மா.நளினி

♦ 'கல்கி'யை ஒரே மூச்சில் படிக்க முடியவில்லை. காரணம் பல விஷயங்களை நின்று நிதானித்து ரசித்துப் படிக்க வேண் டியிருப்பதுதான். பயனுள்ள பல செய்திகளை ஆழமாக ஆய்ந்து வெளியிடுகின்றீர்கள். வாழ்த்துக் கள்!
சேலம், ரமா-கப்பு.

♦ வைர விழா கொண்டாடிய தினமணிக்குக் கல்கியின் வாழ்த்தை கார்டூனாக்கியிருந்த விதம் அருமை. வெல்டன்!
மொரட்டுப்பாளையம்,
க. நா. இராஜேஸ்வரன்.

# மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம் போட்டி - 7

**16** ஆம் பக்கம் வெளியாகியுள்ள கடைசி மூன்று துணுக்குகளுக் கான விடைகளைக் கீழேயுள்ள வரிசை எண்படி எழுதுங்கள். கூப்பனை அப்படியே பத்திரப்படுத்துங்கள். 26 வாரங்கள் முடிந்ததும் எல்லாவற்றையும் மொத்தமாக எங்களுக்கு அனுப்பி வையுங்கள். அதிகப் போட்டிகளில் கலந்து கொண்டு அதிக வெற்றி பெறுபவருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு!

தவிர, ஆறுதல் பரிசுகளும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

போட்டி - 7

1. ஓவியர் : ..............................

..............................

2. அந்தப் புள்ளி : ..............................

..............................

3. டப்பிங் குரல் கொடுப் பவர் : ..............................

..............................

பெயர் : ..............................

..............................

விலாசம் : ..............................

..............................

..............................



# கர்நாடக அரசுக்குக் கண் திறட்டும் சுவாமிகள்!

சில மாதங்களுக்கு முன்னர், சென்னை சாமியார் வித்தியா னந்த ஸரஸ்வதி, சில பெங்க ளூர் ஆசாமிகளிடம் இரண்டு கோடி ரூபாய் கொடுத்து ஏமாந்ததாக, பரபரப்பாகச் செய்தி அடிபட்டதே! ஞாபக மிருக்கிறதா? இப்போது கேஸ் எந்த நிலையில் இருக்கிறது? பணம் திரும்பக் கிடைத்ததா? சுவாமிகளையே சந்தித்துக் கேட்டோம்.

"என்கிட்டே ஏகப்பட்ட பணம் இருப்பதாக நம்பிக் கொண்டு, சி.பி.ஐ. ஆபீஸர், ஸ்பெஷல் பிராஞ்ச் போலீஸ், பத்திரிகை நிருபர் என்று போலி வேஷங்களில் பலர் வருகிறார்கள். ஆதலால் உங்களை எப்படி நம்புவது?" என்ற சுவாமிகளிடம் நமது அடையாளத்தை நிரூபித்ததும், பேச ஆரம்பித்தார்.

"ஒரு விபத்தில், நான் சிக்கினேன். அப்போது என் பர்ஸனல் டயரியைப் பார்த்து, பெரிய மருத்துவமனை யொன்று கட்டுவதற்காக நான் எனது வெளிநாட்டு அன்பர் களிடம் வசூலித்த பணம் என்னிடம் இருப்பதைத் தெரிந்து கொண்ட அவர்கள் திட்டம் போட்டு என்னை ஏமாற்றி யிருக்கிறார்கள். தாங்கள் வாங்கப் போகும் 300 ஏக்கரில் 20 ஏக்கரை, ஆசிரமம் கட்டுவதற்கு இலவசமாகத் தருவதாகச் சொன்னார்கள். நானும் நம்பி விட்டேன். என்னிடம் பெற்ற இரண்டு கோடி ரூபாய்க்கும் ப்ரோ நோட்டு எழுதிக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறார்கள் பாருங்கள்!" என்று அதை நம்மிடம் காண்பிக்கிறார். தொலைந்து போன டயரியில் பணம் கொடுத்தவர்கள் லிஸ்ட் இருக்கிறதாம்.

பேட்டை அரசியல் முதல் போயஸ் தோட்டம் வரை பேசுகிறார் சுவாமி. காஷாயம் வாங்கிக் கொள்வதற்கு முன்னால், மனைவி கையால் சபரிமலைக்கு மாலை போட்டுக் கொண்டதால், அப்போதே மனைவியை அம்மாவாக வரித்துக் கொண்டு விட்டாராம். இரண்டு மகன்கள். பூர்வாசிரமத்தில் அப்பாரால்.

"என்னை ஏமாற்றிய நான்கு பேரையும் பெங்களூர் போலீஸ் பிடித்தது. என்ன பிரயோஜனம்? ஜாமீனில் வெளியே வந்து ஜாலியாகச் சுற்றிக் கொண் டிருக்கிறார்கள். எல்லாம் அர சியல்வாதிகள் பின்னணி! பெங்களூர் கோர்ட் டில் கேஸ் நடந்து கொண்டிருக்கிறது சம்பவம் அங்கே

நடந்ததால், கேஸை அங்கே பதிவுசெய்ய வேண்டியதாயிற்று!''

இது விஷயமாக போலீஸ் அதிகாரிகள், அரசியல்வாதிகள், அமைச்சர்கள் என்று பலரையும் சந்திக்க நேர்ந்ததால் கர்நாடகா ஆட்சியாளர்களுடன் நல்ல தொடர்பு ஏற்பட்டு இருக்கிறது சுவாமிகளுக்கு.

''மேல் பத்ரா, நேத்ராவதி நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு, உதவும்விதமாக, எனது மேல் நாட்டு பக்தர்களிடம் இருந்து 3,000 கோடி ரூபாய் (அம்மாடியோவ்!) பெற்று, குறைந்த வட்டியில் கர்நாடகா அரசுக்குக் கடன் கொடுக்கப் போகிறேன். இது தொடர்பாக முதல்வர் மற்றும் சம்பந்தப்பட்டவர்களுடன் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கிறது!'' என்று அவர் சொன்னதை, நாம் நம்பவில்லை என்பதைப் புரிந்து கொண்ட சுவாமிகள், கன்னடப் பேப்பர் கட்டிங்குகளை எடுத்து நம்மிடம் காண்பிக்கிறார்.

'தமிழ்நாட்டில் குடியிருக்கும் ஒரு சாமியார் கர்நாடக அரசுக்கு உதவி செய்ய முன் வருவது ஏன்? தமிழ்நாட்டுத் திட்டங்களுக்கு உதவி செய்யலாமே?' - இதை நாம் கேட்கவில்லை. கர்நாடக பத்திரிகையாளர்களே அவரிடம் கேட்டிருக்கிறார்கள்.

''கர்நாடகத்தில், என்னை மதித்து முதல்வரும் மற்றவர்களும் பேசுகிறார்கள். தமிழ்நாட்டில் எனது மதிப்புத் தெரியவில்லை. மேலும் தமிழகத்தில் நடந்து கொண்டிருக்கிற திட்டங்களுக்கு உதவி செய்யலாம் என்றால், தயக்கம் வருகிறது. காரணம்(!?) உங்களுக்கே தெரியுமே!'' என்று பதில் சொல்லியிருக்கிறார் சுவாமிகள்.

'எங்கள் திட்டங்களுக்கு நீங்கள் உதவப் போவது குறித்து 'சென்னா' சந்தோஷம். ஆனால் வரப் போகும் தேர்தல் செலவுகளுக்காக 200 கோடி ரூபாய் கொடுங்கள்!' என்று இவரிடம் கேட்டாராம் கர்நாடகாவின் பிரபல காங்கிரஸ்காரர் ஒருவர்.

''நோ... நோ.. இது மாதிரியெல்லாம் என்னிடம் எதிர்பார்க்காதீர்கள்' என்று சொல்லிவிட்டு வந்து விட்டேன்!'' என்று சுவாமிகள் முடித்த போது, தும்கூர் (கர்நாடகா) சட்டமன்ற உறுப்பினரிடமிருந்து தொலைபேசி வரவும், 'ஏன்றி' என்று அதில் மூழ்கிப் போனார் சுவாமிகள்.

சந்திப்பு : **ப்ரியன்**

## ஈடுசெய்ய முடியாத தீபாவளிப் பரிசு!

♦ பட்டாடை, பட்சணம், பட்டாசு என்று எவற்றாலும் ஈடுசெய்ய முடியாத தீபாவளிப் பரிசு 'அமரர் கல்கி'யின் ''பார்த்திபன் கனவு''. பதிப்பகத்தில் விலைகொடுத்து மொத்தமாக வாங்கிப் படிப்பதை விட எழில்மிகு ஓவியங்களுடன் வாரா வாரம் வரும் கல்கி இதழுக்காகக் காத்திருந்து படிப்பதிலும் குருவி சேர்ப்பது போல் ஒவ்வொரு இதழையும் சேர்த்து வைப்பதிலும்தான் எவ்வளவு மகிழ்ச்சி!
ஸ்ரீவைகுண்டம், ஸ்ரீவை ஸ்ரீவித்யா.

♦ அமரர் கல்கி அவர்களின் ''சிரஞ்சீவித்துவம்'' பெற்ற ''பார்த்திபன் கனவு'' தொடர் வெளிவரவுள்ளது என்ற அறிவிப்பைப் பார்த்தவுடன் மனதில் பூவாணம் பூத்துப் பிரகாசித்தது. சென்ற தலைமுறையினர் படித்து மகிழ்ந்த அதே தொடரை இன்று இளையதலைமுறையினரும் அனுபவிக்க இது ஒரு நல்ல வாய்ப்பு!
சென்னை - 28, வி. சங்கர்.

♦ நான் ஆரம்ப காலத்திலிருந்தே கல்கி வாசகன். அமரர் கல்கியின் கள்வனின் காதலி, தியாக பூமி போன்றவற்றை அவர் விகடனில் எழுதிய போதே படித்தவன். கல்கியில் தியாக பூமியும் ராமாயணமும் இப்போது முடிந்து விட்டதால் புதிதாக அமரர் கல்கியின் பார்த்திபன் கனவு அல்லது கள்வனின் காதலி வெளியிட வேண்டு மென்று சென்ற மாதம் கடிதம் எழுதினேன். தீபாவளிச் சிறப்பிதழில் பார்த்திபன் கனவு ஆரம்பம் என்று படித்து மகிழ்ச்சி அடைகிறேன்.
தஞ்சை, எம். சுந்தரேசன்.

♦ பார்த்திபன் கனவு நாவலை எழுதுவதற்கு அமரர் கல்கி அவர்கள் மாமல்லபுரம், அஜந்தா போன்ற சரித்திர பிரசித்திப் பெற்ற இடங்களுக்குச் சென்று வந்ததாக எங்கள் தாத்தா சொல்கிறார். ஒரு பொன் விழா காலத்திற்குப் பிறகு கல்கி எங்களைப் போன்ற இளையதலைமுறையினரை மறுபடியும் அங்கேயெல்லாம் அழைத்துச் செல்லப் போகிறார் என்பதை நினைக்கும் போது, ஒரே மகிழ்ச்சி!
மங்கைநல்லூர், ஆர். செல்வராணி.

♦ தீபாவளி என்றாலே மகிழ்ச்சிதான். அதுவும் தீபாவளி முதல் 'எழுத்தாளர் திலகம்' அமரர் கல்கியின் ''பார்த்திபன் கனவு'' தொடராக வருகிறது என்பதைப் படித்ததும், என்னுடைய மகிழ்ச்சி இருமடங்காகியது.
புதுக்கோட்டை, ஜி. மாதவன்.

♦ தீபாவளிச் சிறப்பிதழில் அமரர் கல்கி எழுதிய பார்த்திபன் கனவு சரித்திரத் தொடர்கதை மலரத் தொடங்குகிறது என்ற இனிய செய்தியை விட, வேறென்ன தீபாவளிப் பரிசு இருக்கிறது.
திருவாரூர், உதயன்.



• சுரேஷ்பாபு - சரளா தம்பதி

"ஞாயிற்றுக் கிழமைகளில் வீட்டிலேயே குஷியாக உட்கார்ந்து கொண்டு டெலிவிஷனில் சினிமா பார்க்காமல் ஏன் பீச்சுக்கு வந்தீர்கள்?" - இந்தக் கேள்வியைச் சென்னைக் கடற்கரையில் சிலரைச் சந்தித்துக் கேட்டோம்...

"எங்கள் இரு மகன்களும் ஹாஸ்டலில் தங்கிப் படிக்கிறார்கள். விடுமுறை நாட்களில்தான் வீட்டுக்கு வருகிறார்கள். அப்போது டெலிவிஷன் பார்ப்பதை விட எங்களுடன் சேர்ந்திருப்பதையே விரும்புகிறார்கள். அதுவுமில்லாமல் சென்னை ஒரு கான்கிரீட் காடாக மாறி விட்டது. இளைப்பாற ஓர் இடம் வேண்டாமா? எனவேதான் பீச்சுக்கு வந்தோம்!" என்றனர் ரெட்டியும் திருமதி ரெட்டியும்.

"சினிமாதான் வாரா வாரம் வருதே! அதை எப்ப வேணும்னாலும் பார்க்கலாமே... ஆனா பீச் அப்படியில்லையே!" என்றான் அவர்களுடைய பன்னிரண்டு வயது மகன் சிவகுரு.

இளைஞர்களான ரமேஷ், மதன், ஹேமநாதன் ஆகியோரிடம் கேட்ட போது, "இன்றைக்கு ராமராஜனின் ஒரு போர் படம்!" என்று ஜோக்கடித்து விட்டு, "நாங்கள் மூவரும் வெகுநாட்களுக்குப் பிறகு சந்திக்கிறோம். வீட்டில் உட்கார்ந்து கொண்டு டெலிவிஷன் பார்த்தால் மனம் விட்டுப் பேச முடியுமா? அதனால்தான் இங்கே வந்தோம்!" என்றனர்.



• மதன், ஹேமநாதன், ரமேஷ்

• ராஜன்

திரைப்பட எடிட்டரான ராஜன் : "என்னுடைய தொழிலே சினிமா சம்பந்தப்பட்டதாக இருப்பதால் அதைப் பார்த்துப் பார்த்து போரடித்து விட்டது. அதனால்தான் ஒவ்வொரு ஞாயிறன்றும் தவறாமல் பீச்சுக்கு வருகிறேன். ரிலாக்ஸ் ஆகிறேன்!"

"நாங்கள் புதிதாகத் திருமணமானவர்கள் என்பதால் தனிமையை நாடியே இங்கு வந்தோம். காற்றோட்டமான தனிமை பீச்சைத் தவிர வேறு எங்கே கிடைக்க முடியும்?" என்றவர்கள் சுரேஷ்பாபுவும் சரளாவும்.

"என் கணவருக்குக் கண்பார்வை தெரியாது. அதனால் சில வாரங்களுக்கு ஒருமுறையாவது அவரை அழைத்துக் கொண்டு வருவேன். நான் ஆர்வமாகச் சினிமா பார்ப்பவள்தான் என்றாலும் எப்போதும் வீட்டிலேயே அடைந்து கிடப்பதால் மனஉளைச்சல்தான் அதிகமாகும். அதனால் பீச்சுக்கு வரும் போது எனக்கும் ஒரு மாறுதலாக இருக்கிறது!" என்றார் திருமதி தனலக்ஷ்மி.

பேட்டி : ஸ்ரீவித்யா

படங்கள் : கேமரா திருஞானம்



# டி.வி. பார்க்காமல் பீச்சுக்கு வந்தேன்?



# டாக்டர் பேசுகிறார்:

தும்மல் திலகங்களுக்கும் தலைக்கனக்காரர்களுக்கும் இருக்கிற பிரச்னைக்குப் பெயர்தான் சைனசைடிஸ்.

சைனசைடிஸ் பத்தித் தெரிஞ்சுக்கணும்னா, மூக்கையும், அதோட அமைப்பையும் பத்திக் கட்டாயம் தெரிஞ்சுக்கணும். நம் மூக்கு, மையப் பகுதில ரெண்டாகப் பிரிகிறது இல்லியா? இப்படி பிரிக்கற தடுப்பு அமைப்பு ஒரு பக்கம் சாஞ்சிருந்தா அதை 'டிஃப்ளக்டட் நேஸல் செப்டம்'னு சொல்லுவாங்க. நூத்துக்கு அறுபது பேருக்கு இப்பிடித்தான் சாஞ்சிருக்கும்! அதனால மூக்கின் ஒரு துவாரம் கொஞ்சம் சின்னதாயிருக்கும். ஜல தோஷம் பிடிக்கற போது, அந்த துவாரம் அடைத்துக் கொண்டு சுவாசம் விடறது ரொம்ப கஷ்டமா இருக்கும்.

தாங்க முடியாத கஷ்டமிருந்தால் ஆபரேஷன் பண்ணி கோணல் செப்டத்தை நேராக்குவோம்.

மூக்கில நெறைய முடி இருக்கு. அவை நாம் சுவாசிக்கற காத்தில இருக்கற தூசி மாதிரியானவை எல்லாத்தையும் ஃபில்டர் மாதிரி வடிகட்டிடும். கூடியமட்டும் நாம சுத்தமான காற்றை சுவாசிக்க வழி செய்யும்.

இப்ப சைனஸுக்கு வருவோம். அதுவும் ஓர் உடல் உறுப்புதான்! நம்ம மண்டை ஓட்டுல அதிகமா புரைகள் (Hollow Spaces) இருக்கு. இதைத்தான் சைனஸ் என்கிறோம். இவை தலை எலும்போட கனத்தைக் குறைக்கிறது. தவிர, புறச்சூழல் எப்படி இருந்தாலும், நாம் சுவாசிக்கும் காற்றை ஒரே மாதிரியான வெப்ப நிலைக்கு மாற்றித் தரும் பணியையும் சைனஸ் செய்யுது.

இப்படிப் பல பொறுப்புகளைச் செய்யற மூணு வகை சைனஸ் நம் மண்டையில் இருக்கு :

1. எத்மாய்டல் சைனஸ் - இது மூக்குப் பகுதியின் உள்புறமா, தனி எலும்பில அமைஞ்சிருக்கு.

2. நெத்தியில முன் பக்கத்து எலும்புக்குப் பின்னால, இரண்டு பக்கத்திலயும் இருக்கற ஃப்ரன்ட்டல் சைனஸ்.

3. மேக்ஸிலரி சைனஸ்-னு முகத்தில தலை எலும்பின் இரண்டு பக்கத்துலயும் (கன்னத்தின் இருபுறத்திலும்) இருக்கு.

நாம் சுவாசிக்கிற காத்து, சைனஸ் 'ரூட்' வழியாத்தான் நுரையீரலுக்குப் போகுது. அதுனால, அலர்ஜியால் பாதிக்கப்பட்டாலோ, அல்லது வைரஸ் கிருமியால இன்ஃபெக்ஷன் ஏற்பட்டாலோ, சைனஸுக்குள் இருக்கற ஜவ்வு உப்பிக் கொண்டு, வீக்கமாயிடுது. நிணநீர் சேர்ந்து கொண்டு மூக்கால் பொலபொலவென்று கொட்டுது. கிருமிகளோட ஆதிக்கம் அதிகமா இருந்தா, நிணநீர் சளியாக மாறும். சீழ் கூடப் பிடிச்சுடும். இப்படி சைனஸ்கள் எல்லாம் கெட்டுப் போய் வைரஸ் ஆதிக்கம் செலுத்தினா, நாம தூங்கற போது, சைனஸ்ல இருக்கற திரவம், மூக்குக்குப் பின்புற வழியா வழிந்து (போஸ்ட் நேஸல் செக்ரிஷன்) நம்ம நுரையீரலுக்குப் போறது. அப்போ நுரையீரல்லயும் நோய்த் தொற்று ஏற்பட்டு, நிமோனியா வரக் கூடும்.

## மூக்கிலே சளி; விரல் நுனியில் தீர்வு!

தலையில் குத்து வலி, தும்மல் கச்சேரி, மூக்கில் குற்றாலம் - இதெல்லாம் 'சைனசைடிஸ்' (அதாவது சைனஸில் நோய்த் தொற்று) இருப்பதன் அறிகுறிகள். பொதுவா இந்தத் தலைவலி மாலை நேரத்துலதான் அதிகமா இருக்கும். அலர்ஜியை உண்டுபண்ணும் காரணத்தைப் போக்கிவிட்டால் சைனசைடிஸ் குறைஞ்சு மறைஞ்சுடும்.

ஆனால் தொல்லை அதிகமாகி ஜுரம் வரும் போது, டாக்டர் உதவி தேவை. அடிக்கடி இந்தத் தொல்லையால அவஸ்தை படுவோர் காது-மூக்கு-தொண்டை சிகிச்சை நிபுணரை அணுகி, மேக்ஸிலரி சைனஸ்-ஐச் சுத்தம் பண்ணிக்கணும்.

இந்த மாதிரி, சைனஸை பக்ஞ்சர் செஞ்சு சுத்தம் பண்ணற முறை நல்லது இல்லேன்னு சொல்றவங்க உண்டு. காரணம், இதையே திரும்பத் திரும்பச் செய்ய வேண்டிய நிலை ஏற்படும் வாய்ப்பு இருக்கு. ஆனால், மிக அதிகமாக பாதிக்கப்படாத சைனஸ்களை இப்படிச் சுத்தம் செய்யறது தவறு இல்லே. திரும்பத் திரும்பச் செய்ய வேண்டிய நிலை ஏற்படாது.

சைனஸில் மிகவும் மோசமான - தீவிரமான - கெடுதல் இருந்து துன்பம் கொடுத்தா, அதுக்கு அறுவைச் சிகிச்சை செய்யலாம். அந்த சைனஸின் அடிப்பாகத் துல, பல்லுக்கு மேல, ஒரு சின்ன ஓட்டை போட்டு, அது வழியே சீழ் வெளியே வரச் செய்ய வேணும். இதுக்குப் பேரு கால்டி வெல் லைக்ஸ்.

இந்தத் தீவிர சிகிச்சைக்கு முன்னால, சில சாதாரண சிகிச்சைகளும் இருக்கு. அலர்ஜிக்கு எதிரான மருந்துகளைக் கொடுக்கறோம். இன்ஃபெக்ஷன் ஆதிக்கம் அதிகமாகி சீழ்பிடிக்கும் நிலைமை ஏற்பட்டா, ஆன்ட்டிபயாடிக்ஸ் கொடுப்போம். மூக்கடைப்பு ரொம்ப இருந்தா, மூக்கின் உள்ளே இருக்கும் ஜவ்வின் வீக்கத்தைக் குறைக்கிற நேஸல் டிராப்ஸ் மூணு நாலு தடவை விட்டுக்கச் சொல்லுவோம்.

நமக்கு வரக்கூடிய அலர்ஜியைத் தவிர்க்க முயற்சி பண்ணணும். அதாவது தூசி, தும்பு இருக்கற இடத்துக்குப் போகாம தவிர்க்கலாம். தூசி, தும்பு தாக்காமல் இருக்க மூக்கின் உள்ளே ஃபில்டர் அணியலாம். கோயமுத்தூரில் இது கிடைக்கிறது. மூக்கில் துணியால் மூடி 'மாஸ்க்' மாதிரி கட்டிக் கொள்ளலாம்.

சில பேருக்கு தூசி மட்டுமின்றி, ஸ்ட்ராங் கான வாசனைகள், புகை போன்றவையும் அலர்ஜி ஏற்படுத்தும். எதனால் அலர்ஜி என்று கண்டுபிடித்து விலக்க வேண்டும்.

மூக்கடைப்பும் ஒழுகலும் நீங்க நீர் ஆவி பிடிக்கலாம். இதுக்கு நெல்சன்ஸ் இன் ஹேலர்னு ஒரு பீங்கான் பாத்திரம் இருக்கு.



இதில் நேரா நீராவி பிடிக்கலாம். இல்லே, டிக்ஞர் பென்சாயின் மருந்தை ஒரு டீஸ்பூன் விட்டு, தண்ணீர் விட்டுக் கலக்கி, ஆவி வரும் போது உள்ளே உறிஞ்சி, வெளியே விடணும்.

ரொம்ப சிம்பிளா, இன்ஹேலர் விக்கறதே, அதை வாங்கி (மூக்குப் பொடி போடற மாதிரி!) நாசியில வச்சு இன்ஹேல் பண்ணலாம்! இதைச் சில பேர் சிகரெட் பிடிக்கற மாதிரி பழக்கமா பண்ணிக்கிடறாங்க. அதுவும் தப்பு!

நாம தைரியமா பண்ணிக்கக் கூடிய பழக்கம் பிராணாயாமம்ங்கற breathing exercise : காலையில் காலி வயிற்றோடு நிமிர்ந்து உட்கார்ந்து, மூக்கின் ஒரு துவாரத்தை விரலால் மூடிக் கொள்ளணும். மறு துவாரத்தால் மூச்சை மெள்ள நெஞ்சுநிமிர உள்ளிழுக்கணும். கடைசி வரை இழுத்து, பின் மூடிய துவாரத்தைத் திறந்து மற்ற துவாரத்தை மூடிக் கொள்ளணும். இப்போ திறந்த துவாரம் வழியே, மெள்ள மூச்சை வெளி விடணும். இதை மாற்றி மாற்றிப் பத்து முறை செய்யணும்.

இதைத் தொடர்ந்து தினமும் செய்தால் மூச்சுப் பாதை முழுதுமே வாக்குவம் க்ளீனரால் சுத்தப்படுத்தின மாதிரி சுத்தமாயிடும். அப்படியும் கிருமிகளுக்கு அங்கே என்ன வேலை! விரல் நுனியில் தீர்வு இருக்க, வேறு தேடுவானேன்!

**- டாக்டர். பி. ஆர். சுப்பிரமணியன்**

# அ.தி.மு.க.வில் விசுவாசத்துக்கு மதிப்புக் கிடையாது!



***மதுரையில் நடந்த ஜெயலலிதா பேச்சு தொகுப்பு புத்தக வெளியீட்டு விழாவில், எம்.ஜி.ஆர். பற்றியும் காங்கிரஸில் சேர்ந்த நா. காமராசன் பற்றியும் பேசியதற்காக அமைச்சர்களின் கண்ணெதிரிலேயே தாக்கப்பட்ட கவிஞர் முத்துராமலிங்கத்தைச் சந்தித்த போது...***

**"எம்.**ஜி.ஆரால் அ.தி.மு.க. துவங்கப்பட்ட போது முதல் பாட்சிலேயே சேர்ந்தவன் நான். அப்பொழுது அ.தி.மு.க.வில் மிகவும் 'பாப்புலரான' பேச்சாளர்கள், நான், நா. காமராசன், காளிமுத்து. நல்ல பேச்சாளர்களைக் கண்டால் எஸ்.டி. சோமசுந்தரத்துக்குப் பிடிக்காது. காரணம், அவருக்குப் பேசத் தெரியாது. இந்த எஸ்.டி.எஸ். எம்.ஜி.ஆர். காலத்தில், நான் மேடையில் அமர்ந்திருக்கும் போது கீழே உட்கார்ந்திருந்தவர். இப்போது ஆட்களைத் தூண்டி விட்டு எனக்கெதிராக கலாட்டா செய்கிறார். அ.தி.மு.க.வில் ஸீனியாரிடிக்கும், விசுவாசத்துக்கும் கொஞ்சம் கூட மதிப்போ, மரியாதையோ கிடையாது.

" 'ஜனநாயகம்' என்ற சொல் கேட்பதற்கு நன்றாக இருக்கிறது. ஆனால் அ.தி.மு.க.வில் அதற்கெல்லாம் இடம் கிடையாது. கருத்தை முழுமையாகச் சொல்லக் கூட விட மாட்டேன் என்கிறார்கள். ஒரு விசுவாசத் தொண்டன் தாக்கப்பட்டிருக்கிறானே என்ற கவலை தலைமைக்கும் இல்லை. எம்.ஜி.ஆருடன் கருத்து வேறுபாடு இருந்தால் கூட அவரைச் சந்தித்துப் பேச முடியும்; விளக்க முடியும். இங்கே போடப்பட்டிருப்பதோ இரும்புத் திரை!

"1991ம் ஆண்டு தேர்தலில் எனக்கு எம்.எல்.ஏ. ஸீட் கிடைத்திருக்கும். ஆனால் அம்மாவுக்கு அணுக்கமாக இருப்பவர்கள் அதைக் கெடுத்தார்கள். "நான் கப்பல் வைத்திருப்பதாக அம்மாவிடம் வத்தி வைத்தார்கள். உண்மையென்னவென்றால் வங்கிக் கடன் பெற்று மீன்பிடி படகு வாங்கினேன். உண்மையைத் திரித்துச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். அந்தப் படகும் கடலில் மூழ்கி விட்டது. இப்போது இன்ஷூரன்ஸ் கம்பெனிக்கு நடையாய் நடந்து கொண்டிருக்கிறேன்.

"அரசியலில் அலைந்த காலத்தில் திரைப்படத் துறையில் தீவிரமாகக் கவனம் செலுத்தியிருந்தால் கூட, பணமும், புகழும் வந்திருக்கும். ஆனால் அது ஒரு தனி உலகம். 24 மணி நேரமும் அங்கிருக்கும் ராஜாக்களுக்கும் கூஜாக்களுக்கும், அடிமை வேலை செய்து கொண்டிருந்தால்தான் அவர்களின் கடைக்கண் பார்வை விழும். பாட்டெழுத வாய்ப்புக் கிடைக்கும். தன்மானம், சுயமரியாதை இருப்பவன் தமிழ்த் திரைப்படக் கவிஞனாக முடியாது. அதனால்தான் நான் அங்கே போகவில்லை..." என்று புலம்பித் தீர்த்தார் முத்துராமலிங்கம்.

எம்.ஜி.ஆர். ஆட்சிக் காலத்தில் இருமுறை வாரியத் தலைவராகப் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது இவருக்கு. இப்போது கூட, ஜெயலலிதாவிடமிருந்து அழைப்பும் ஆறுதலும் வராதா என்று காத்துக் கொண்டிருக்கிறார். அப்படி வந்து விட்டால் அ.தி.மு.க.வின் மீது அவரது "விசுவாசம்" தொடரும். இல்லையென்றால், இதை நீங்கள் படித்துக் கொண்டிருக்கும் போது, வை.கோ.வின் உடன்பிறப்பாகியிருக்கலாம் இவர்!

- ஸ்ரீநிவாசன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

திடீரென்று உங்களை உடம்புவலி தாக்கினால்... குடும்பப் பொறுப்பு,
சிரித்துப் பேசி மகிழ்வது, வேலை, எதுவுமே பாரமாகத் தோன்றும்.

# உடம்பு வலியைப் போக்குங்கள் ஜண்டு பாம் தடவுங்கள்.

விரைவில் துடிப்புடன் விளங்குங்கள்.



உடம்புவலி தனியாக வருவதில்லை. கூடவே வேறு சில உபாதைகளையும் அழைத்து வரும் – நடையிலே தளர்ச்சி, நிற்பதிலும் உட்காருவதிலும் சிரமம். போன்றவை. இதில் கவலைப்பட ஏதுமில்லை.

வலியை நீக்கும் ஜண்டு பாமிலே ஆழமாக ஊடுருவி செயல்புரியும் விசேஷ மருந்துப் பொருட்கள் உள்ளன. இவை உடம்புவலி மற்றும் இதர உபாதைகளையும் இழுத்து வெளியேற்றி, உங்களுக்கு உடனடி நிவாரணம் அளிக்கின்றன.

வலியை நீக்கும் ஜண்டு பாமை எப்போதும் கைவசம் வைத்திருங்கள். இது ஜலதோஷம் மற்றும் தலைவலி போன்ற உபாதைகளிலிருந்தும் விரைவில் நிவாரணமளிக்கிறது.



ஜண்டு பாம் ஜண்டு பாம் வலியை நீக்கும் பாம்
ஜலதோஷம் தலைவலி நோவுகளையும்
நொடியில் நீக்கிடுமே

புதிய
5 கிராம் டியூப்

பாம் ஒன்று
செயல் மூன்று

30, 10 கிராம் பேக்கிலே.

1. ஜலதோஷம் 2. தலைவலி 3. உடம்பு வலி

AP/ZB/524/94/TAM/6